பக்... ...சுகி.

## கிழக்கு-மேற்கு ஜெர்மனி ஒப்பந்தம்

பெர்லின் மார்ச் 15—

கிழக்கு ஜெர்மனியும் மேற்கு ஜெர்மனியும் தூதர்களைப் பரிமாறிக் கொள்ளுவதற்கான ஒப்பந்தத்தில் கடந்த வியாழனன்று கையெழுத்திட்டனர்.


# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 12 மதுரை 19—3—74 செவ்வாய் மலர் 65


...ரப்பு ஆர்...

...விலைவாசி உயர்வை எதிர்த்... செய்யும் பல்லாயிரக்கணக்கான ... செங்கொடி ஏந்தி ரோடுகளில் ஆர்... னர்.

இரண்டாவது நாளாக இந்த ... நடைபெற்றது. இதனால் போக்கு வரத்து ... கப்பட்டது.

# அமெரிக்கச் சதிகளை முறியடித்திட இந்திய, சீன, சோவியத் நட்புறவே சரியான வழி

## ஆசியப் பாதுகாப்புத் திட்டம் பற்றி மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி பொலிட்பீரோ அறிக்கை

கல்கத்தா, மார்ச். 16—

**இந்துமாகடல் சமுத்திரத்திலுள்ள டியாகோ கார்சியா தீவில், அமெரிக்க ஏகாதிபத்யம் அணுகுண்டு தளங்கள் ஏற்படுத்துவதைக் கண்டித்தும் — இந்தப் பேரபாயத்துக்கு பதிலடி கொடுக்க—ஆசிய நாடுகள் தங்களுடைய பந்தோபஸ்தையும் அரசுரிமையையும் பாதுகாத்துக் கொள்ள, ஆசிய நாடுகள் கூட்டுப்பாதுகாப்பு ஒப்பந்தம் செய்து கொள்ள வேண்டுமென வற்புறுத்தியும், இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட)யின் பொலிட்பீரோ நீண்டதோர் தீர்மானம் நிறைவேற்றியுள்ளது.**

**இப்படிப்பட்ட சூழ்நிலையில்எவ்வித காலதாமதமும் செய்யாமல்; இந்தியசர்க்கார் முனைப்புடன் முன் வந்து, சோவியத் யூனியனுடனும் சோஷலிஸ்ட் சீனத்துடனும், மற்றுமுள்ள ஏகாதிபத்ய எதிர்ப்புசக்திகளுடனும் ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளுடனும் மேலும் கூடுதலான நட்புறவுகளை வளர்த்துக்கொள்ள வேண்டுமென்றும் பொலிட்பீரோ கோருகிறது.**

சென்றவாரம் கல்கத்தாவில் கூடிய இந்திய கம்யூனிஸ்ட் கட்சியின் (மார்க்சிஸ்ட்) பொலிட் பீரோ கூட்டத்தில் மேற்கண்ட தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

தீர்மானத்தின் முழு விபரமாவது:—

### தீர்மானம்

இந்துமகா சமுத்திரத்தின்மத்தியில்— ஆப்பிரிக்காவுக்கும், ஆஸ்திரேலியாவுக்கும் நடுவாந்தரத்திலுள்ள, டீகோ கார்சியா என்ற தீவை— முழுமையான மிகப் பெரிய கடற்படை தளமாகவும், விமான தளமாகவும் அபிவிருத்தி செய்தென்று. அமெரிக்காவும், பிரிட்டனும் உடம்படிக்கை செய்துகொண்டிருக்கிறது.

இந்த கடற்படையில், அணு ஆயுத ஏவுகணைகளை அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகள் பொருத்திட தீர்மானித்திருக்கிறார்கள்.

ஏகாதிபத்தியங்களின் இந்த நடவடிக்கையானது, ஆசிய, ஆப்பிரிக்க நாடுகளுக்கும், இந்துமகா சமுத்திரத்தின் கடற்கரையோர நாடுகளுக்கும், குறிப்பாக இந்தியாவுக்கும், எண்ணெய் வளமிக்க அரபுநாடுகளுக்கும் பேராபத்தான மிரட்டலாக உள்ளது.

### போர்த்துகீசுடனும் இராணுவ தளம்

இதுமட்டுமல்ல, ஆப்பிரிக்காவில் பாசிஸ்ட் போர்த்துக்கல்லுக்குச் சொந்தமான மொஜாம்பிக் நாட்டுடனும், அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் இராணுவ உடன்பாடு செய்திருக்கிறார்கள். அதன்படி, மொஜாம்பிக் நாட்டில் நகோலா லாரென்ஸ், மார்க்குஸ் ஆகிய இடங்களிலும், அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் இராணுவ தளங்கள் அமைப்பார்களாம்.

### இன்னும் எத்தனையோ தளங்கள்

இவை மட்டுமல்ல. ஏற்கனவே அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளிடம் செங்கடல் தீரத்தில் எத்தியோப்பியாவை அடுத்துள்ள ஆஸ்மாரா தளமும் இந்துமகா சமுத்திரத்தில் அல்டாபாரா, சேய்சில்லஸ், கோகாஸ், கிரிஸ்டினேஸ் ஆகிய தீவுகளிலும், வடமேற்கு முனையிலும், ஆஸ்திரேலியாவிலுள்ள டார்வினிலும் இராணுவ தளங்கள் வைத்திருக்கிறார்கள். இந்த எல்லா தளங்களும் சேர்ந்து, அமெரிக்க பிரிட்டிஷ் ஏகாதிபத்தியவாதிகளின் இராணுவ தள சங்கிலியை முற்றுப்பெறச் செய்து விடுகிறது.

### அரபு நாடுகளிலும் அமெரிக்க தளங்கள்

அமெரிக்காவின் தளங்கள் இத்துடன் நிற்கவில்லை. சவூதி அரேபியாவிலும், ஈரானிலும் உள்ள பெரும் இராணுவ தளங்களை அபிவிருத்தி செய்வதிலும் தீவிரமாக ஈடுபட்டிருக்கிறார்கள். இந்த எல்லா தளங்களிலும் கோடான கோடி ஆயுதங்களையும் யுத்தக் கருவிகளையும், கொண்டுபோய்க் குவிக்கிறார்கள். நவீனரக யுத்த விமானங்களையும், யுத்தக்கப்பல்களையும், ஏவுகணைகளையும் அளவிட முடியாத அளவுக்கு கொண்டு போய்க் குவித்து வருகிறார்கள்.

அமெரிக்க ஏகாதிபத்தியம் பாகிஸ்தானையும் ஆயுதபாணியாக்கிக் கொண்டிருக்கிறது.

### ஆயில் தர மறுத்த அரபுநாடுகளைப் பழிவாங்க

அரபு நாடுகள் அமெரிக்காவுக்கு எண்ணெய் சப்ளை செய்ய மறுத்ததற்காக அந்த நாடுகளை இராணுவ ரீதியில் பழிவாங்கவும்—அமெரிக்காவுக்கு எண்ணெய் விற்கக்கூடாது என்று அரபு நாடுகள் விதித்துள்ள தடையை நீக்குமாறு கோரியும் அமெரிக்கா பயமுறுத்துகிறது.

அரபு நாடுகளைப் பணியவைத்து தங்களது ஆக்ரமிப்புக் கொள்கைகளை நிறைவேற்றிக் கொள்ளுவதற்காக, அமெரிக்க ஏகாதிபத்யமானது ஈரானையும், இஸ்ரேலையும் ஊக்குவித்துக் கொண்டிருக்கிறது.

### முதுகு முறிந்தும் புத்தி வரவில்லை

வியட்னாம் நாட்டின் மீது 20 ஆண்டுகளுக்கு மேலாக மிருகத்தனமான அப்பட்டமான ஆக்ரமிப்புபோர் நடத்தி முதுகெலும்பு முறிந்து தோல்வி கண்ட அமெரிக்கஏகாதிபத்தியவாதிகள் இன்னும்கூட பாரிஸ் உடன்பாட்டை தொடர்ந்து மீறிக்கொண்டேயிருக்கிறார்கள். தனது கைப்பொம்மை தியூ சர்க்காரைத் தூக்கி நிறுத்த கோடிக்கணக்கான டாலர் மதிப்புடைய புதிய ஆயுதங்களையும், சாதாரண மக்களின் உடையில் 20,000 (இருபதாயிரம்) இராணுவ ஆலோசகர்களையும் தொடர்ந்து அனுப்பிக்கொண்டேயிருக்கிறார்கள்.

அது போலவே கம்போடியாவில் தனது எடுபிடியான லான்நால் சர்க்காரையும் அமெரிக்கா ஆதரிக்கிறது.

தாய்லாந்திலும், பிலிப்பைனிலும், ஓகினவாலிலும், ஜப்பானிலும் உள்ள இராணுவதளங்களை தொடர்ந்துவைத்துக் கொண்டேயிருக்கிறது.

இந்தோனேஷியஇராணுவ ஆட்சியை அமெரிக்க ஏகாதிபத்தியம ஆதரிக்கிறது என்பது மட்டுமல்ல அதனுடன் சேர்ந்து நெருங்கிய உறவும் கொண்டிருக்கிறது.

### ஆசிய நாடுகளின் அரசுரிமைக்கு ஆபத்து

ஆசிய மக்களின் பாதுகாப்புக்கும், ஆசிய அரசுகளின் சுதந்திரமும் இடைவிடாமல் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளால் மீறப்பட்டே வருகின்றன.

சோசலிஸ்ட் இயக்கங்களிடமிருந்தும், தேச விடுதலை இயக்கங்களிடமிருந்தும் மீண்டும் மீண்டும் தோல்விகளைப் பெற்றாலும்கூட, ஏகாதிபத்தியமானது தொடர்ந்து ஒரு பயமுறுத்தலாகவே இருந்து வருகிறது.

அதனால்தான் நமது கட்சியானது, இதை ஒரு அவசரப் பிரச்சினையாகக் கருதுகிறது.

ஆசிய நாடுகளும், ஆசிய மக்களும் தங்களுடைய பந்தோபஸ்தையும், அரசுரிமையையும் பாதுகாத்துக் கொள்ளவும்— அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் பயமுறுத்தலால், சாகசங்களுக்கும் பதிலடி கொடுக்கவும், தங்களுக்கிடையே ஒற்றுமையைக் கட்ட வேண்டியது மிகமிக அவசர அவசியமாகிவிட்டது என்று நமது கட்சி கருதுகிறது.

### அமெரிக்காவே முதல் எதிரி

இது குறித்து சோவியத் அரசாங்கம், ஆசியப் பாதுகாப்பு ஒப்பந்தம் ஏற்படுத்திட முயற்சி செய்வதை நமது கட்சியின் பொலிட் பீரோ கவனித்தது.

ஆசிய நாடுகளின் பந்தோபஸ்துக்கும், சுதந்திரத்துக்கும் பயமுறுத்தல் எங்கேயிருந்து வருகின்றது என்பதையும், அந்தப்பயமுறுத்தலின் உண்மையான தன்மை என்ன என்பதைப் பற்றியும் சுட்டிக்காட்டாமல், ஒரு ஆசிய பந்தோபஸ்து ஒப்பந்தம் பற்றி சிந்திப்பதோ பேசுவதோ அருத்தமற்றதாகும் என்று நமது கட்சி கருதுகிறது.

ஆசிய தேசங்களுக்கு உண்மையான எதிரி அமெரிக்க ஏகாதிபத்யமே. ஆசியாக் கண்டத்தில் அமெரிக்க ஏகாதிபத்தியம் நடத்திவரும் ஆக்ரமிப்புச் செயல்களிலிருந்துதான், ஆசியநாடுகளுக்கு பயமுறுத்தல் ஏற்பட்டிருக்கிறது.

எனவே, ஆசியப் பாதுகாப்பு ஒப்பந்தத்தின் தாக்குதல் குறியானது. ஆசியாவில் அமெரிக்க ஏகாதிபத்தியமும் இதர ஏகாதிபத்தியங்களும் செய்துவரும் சதிகளுக்கு எதிராகவே இருக்கும் என்று பிரகடனம் செய்திருக்க வேண்டும். மற்றும் இந்த ஆசியப்பாதுகாப்பு ஒப்பந்தமானது அமெரிக்காவின் யுத்த தளங்கள் அனைத்தையும் உடனடியாக ஒழித்திட வேண்டும் என்று கோர வேண்டும்.

ஆசிய மண்ணிலிருந்து அமெரிக்கப்படைகள் அனைத்தும் வெளியேற வேண்டும்; இந்தியாவுக்குச் சொந்தமான தீவுகளிலிருந்தும், மேற்கு பசிபிக்மகா சமுத்திரத்திலுள்ள தீவுகளிலிருந்தும் அமெரிக்கப் படைகள் வாபஸ் பெற வேண்டுமென்றும் கோர வேண்டும்.

### முன்னணி பலமுற சீனவும் வேண்டும்

இரண்டாவதாக, இன்னொரு விஷயத்தையும் நமது கட்சி முக்கியமாக கருதுகிறது. இந்த ஆசிய பாதுகாப்பு முன்

(4-ம் பக்கம் பார்க்க)

### யுத்தத்திலும் சமாதான காலத்திலும்

# வியட்நாமின் வெற்றிகள்

## வியட்நாம் தொழிற்சங்க மாநாட்டில் தோழர் பி. டி. ரணதிவே வாழ்த்து

ஹனாய், மார்ச். 15—

**வியட்நாம் தொழிற்சங்க யூனியனின் மூன்றாவது தேசிய மாநாடு அண்மையில் நடைபெற்றது. அந்த மாநாட்டுக்கு சி. ஐ. டி. யூ.வின் தலைவர் தோழர் பி. டி. ரணதிவே, நேரில் வந்திருந்து ஆற்றிய உரையைக் கீழே பிரசுரிக்கிறோம்.**

அன்புள்ள தோழர்களே நண்பர்களே

இந்தியத் தொழிலாளி வர்க்கத்தின் வாழ்த்துக்களை இந்திய தொழிற்சங்க மையத்தின் சார்பாகவியட்நாம் தொழிலாளி வர்க்கத்துக்கும் உங்களுடைய மாநாட்டுக்கும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

கேரளத்தில் கடந்த ஏப்ரல் மாதத்தில் நடைபெற்ற எங்களுடைய மாநாட்டுக்கு உங்களுடைய பிரதிநிதிகள் வந்திருந்தது எங்களுடைய ஸ்தாபனத்தாலும் தொழிலாளி வர்க்கத்தாலும் பெரிதும் பாராட்டப்பட்டது.

அவர்களுடைய பேச்சுக்களும், செய்திகளும் எங்களுடைய மனதை கனியச் செய்து வியட்நாம் தொழிலாளி வர்க்கத்துக்கும், மக்களுக்கும் இந்தியத் தொழிலாளி வர்க்கத்துக்கும் மக்களுக்கும் இடையே ஒருமை பாட்டுணர்ச்சியையும் நட்புணர்ச்சியையும் பலப்படுத்தியுள்ளது.

அமெரிக்கக் காட்டுமிராண்டித் தாக்குதலுக்குப் பலியாகி உயிர் நீத்த லட்சோப லட்சம் ஆண் பெண் தொழிலாளிவர்க்கத் தியாகிகளுக்கும் விவசாய வர்க்கத் தியாகிகளுக்கும் மக்களுக்கும் என்னுடைய அஞ்சலியை இப்போது செலுத்துகிறேன்.

### ஹோஷிமினுக்கு வீர வணக்கம்

அழியா புகழ் பெற்ற புரட்சித்தலைவர் தோழர் ஹோசிமினுக்கும் என்னுடைய வீர வணக்கத்தை செலுத்திக் கொள்ளுகிறேன்.

வியட்நாம் மக்கள் நடத்தியுள்ள போராட்டம் முன்னெப்போதும் கண்டிராத ஒப்புவமையற்ற போராட்டம். இம்மாதிரி மேலான பலம் பொருந்திய நாசகர ஆயுதங்களை வைத்துக் கொண்டிருந்த ஒரு மிருகத்தனமான சக்தியை மக்கள் எதிர்த்து நின்ற நிகழ்ச்சி முன்னெப்போதும் கண்டதில்லை என்றே கூறலாம். ஆனால் அந்த மக்களின் சுதந்திர உணர்வும், மேம்பட்ட சமூக அமைப்பை அமைத்துக்கொள்ளுவதற்கானஉரிமையும் குண்டுகளையும் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகளின் பயத்தையும்



வெற்றி கொண்டது.

நாட்டை ஒன்றுபடுத்துவதற்கும், சோஷலிசத்தின ஆதாயங்களை காப்பதற்கும் வியட்நாம் மக்களும் தொழிலாளி வர்க்கத்துக்காகவும் சுதந்திரத்துக்குப் போராடும் எல்லா மக்களுக்காகவும் நடத்திய போராட்டம்.

### சோசலிச நாடுகளின் ஆதரவு

வெல்லுதற்கரிய வியட்நாம் மக்களுக்கு அவர்களுடைய போராட்டத்தில் சோவியத் யூனியனிடமிருந்தும், மக்கள் சீனத்திடமிருந்தும், எல்லா சோஷலிஸ்ட் நாடுகளிடமிருந்தும மதிக்க வொண்ணாத உதவி

(4-ம் பக்கம் பார்க்க)

## கேரள அமைச்சரவை ராஜினமா செய்ய... இ. கே. நாயனர் கோரிக்கை



கோழிக்கோடு, மார்ச். 14—

கேரள ஆளும் கூட்டணியைச் சேர்ந்த முஸ்லீம் லீக் கட்சி அதே கூட்டணியிலுள்ள இந்திரா காங்கிரஸ் மீது பல்வேறு குற்றச்சாட்டுகளை சுமத்தியிருக்கும் நிலைமையில், கேரள ஆளும் கூட்டணிக்கு ஆட்சியில் நீடிக்க தகுதியில்லை என்றும் எனவே கேரள அமைச்சரவை ராஜினமா செய்ய வேண்டுமென்றும் கேரள மாநில மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் இகே நாயனர் கோரியுள்ளார்.

கோழிக்கோட்டில் பத்திரிகையாளர்களிடையே தோழர் நாயனர் பேசியதாவது:—

### முஸ்லீம லீக் மாநிலக்குழு அறிக்கை

கேரளத்தில் இந்திராகாங்கிரஸ் முஸ்லீம் சமுதாயத்தை பகிரங்கமாகத் தாக்குகிறது. சட்டம் - ஒழுங்கு நிலைநாட்டுவதில் பாரபட்சமாக நடந்து கொள்கிறது, ஆட்சியந்திரத்தை கட்சி வளர்ச்சிக்காக பயன்படுத்துகிறது போன்ற குற்றச்சாட்டுகளை முஸ்லீம லீக் மாநிலக்குழு இந்திராகாங்கிரஸ் மீது சுமத்தியுள்ளது.

தனது நிலைபாட்டில் எந்த மாற்றமும் ஏற்படுத்த தயாரில்லை என்று இந்திரா காங்கிரசும் அறிவித்துள்ளது.

குற்றச் சாட்டுகளைக் கொண்டுவந்த முஸ்லீம்லீக், அக் குற்றச்சாட்டுகள் இ. காங்கிரசினல் புறக்கணிக்கப்பட்டபின ஆளும் கூட்டணியில் இருப்பதன் அர்த்தம்தான் புரியவில்லை.

### ஆளும கூட்டணிக்குள் பிளவு

ஆளும் கூட்டணிக்குள் இரு கட்சிகள் இந்த அளவுக்கு மோதிக் கொள்கின்ற சூழ்நிலையில் ஆட்சி... நீடிக்க அச்சுதர் அமை... ரவைக்கு தகுதி இல்லை.

போலீஸ் இலாகா... தனது கட்டுப்பாட்டில் வைத்து எதிர்க்கட்சி... குறிப்பாக மார்க்சிஸ்ட்... யூனிஸ்ட் கட்சியை அ... ஒடுக்க முயற்சிக்கிறது ... காங்கிரஸ்.

முஸ்லீம் லீக்கின் மா... குழு கூட்டத்தின்போது... திய ரகசிய போலீசார்... திருந்ததும் குறிப்பிடத்... தாகும்.

காங்கிரஸ் ஆட்சி... முஸ்லீம லீக் கட்சி கொ... வந்துள்ள குற்றச்ச... கள் பற்றி வல்து ... னிஸ்ட் கட்சியின் ... தென்ன என்பதை ... விரும்புகின்றேன்.

கேரள அரசு கவிழ்... மாற்று அமைச்சர... அமைக்க மார்க்சிஸ்ட்... னிஸ்ட் கட்சி முன்வ... தேர்தல் வாயிலாகவே ... அமைச்சரவை உரு... வேண்டும்.

இவ்வாறு தோழர் ... ஞர் பேசினர்.

## டாடாவின்... சாம்ராஜ்ஜி... கிழக்காசிய... நாடுகளுக்... பரவுகிறது...

பம்பாய், மார்ச்...

கிழக்காசிய நாடுக... அதிகமான ஏற்றுமதி... டார்களைவாங்குவதில ... இரண்டாவது ஸ்தான... பெற்றுள்ளார். பி... பைன்ஸ் நாட்டிற்கு ... டும் 7 கோடி ரூபாய் ... புள்ள சரக்குகளை ... மதி செய்யுமாறு அ... டாடாவுககுஆர்டர்அ... யுள்ளது.

### இந்தியாவில் முதலிட...

கிழக்காசியாவுக்கு ... மதி செய்வதில் ட... இரண்டாவதுஸ்தான... வகிப்பதால் இந்திய... ஏற்றுமதியாளர்க... டாடா முதலிடத்தை ... கிறார்.

பிலிப்பைன்ஸ் ம... ஏனைய கிழக்கா... நாடுகளுக்கு டா... ஏற்றுமதி செய்யும் ... களில டிரான்ஸ்ஃபா... போன்ற மின்சாரபெ... களை முதலிடம் வகிக... றன.

### ஏற்றுமதி ஒப்பந்தம்

மேலும் தாய்லா... 1 கோடியே 20 லட்ச... புள்ள ஒருதொழிற்சா... 35 லட்ச ரூபாய் மதிப்... இயந்திரங்கள் இந்திய... ருந்து ஏற்றுமதி கிற... அது மட்டுமின்... கோடி ரூபாய் மதிப்ப... நிர்மானிக்கப்பட வி... ஒரு தொழிற்சாலைக்கு... சாத்டாடா 7 கோடி ...

(4-ம் பக்கம் பார்க்...

## ... உணர்த்தும் ...ண்மை

குஜராத் சட்டமன்றம் கலைக்கப்பட்டு விட்டது.

குஜராத் மாநிலத்தில் எழுந்த கிளர்ச்சியில் 80 பேர் ...க்கொல்லப்பட்டிருப்பதாக அரசாங்கம் ஒப்புக் ...ண்ட புள்ளிவிவரமே தெரிவிக்கிறது.

எத்தனை பேர் தினமும் குண்டடிபட்டு விழுந்து ...ண்டிருந்தாலு மக்களின் ஜனநாயக ரீதியிலான ...ரிக்கையை ஏற்கக் கூடாது என்ற மத்திய காங்கிரஸ் ...சின் வெறித்தனத்தால்தான் இரண்டு மாதங்களுக்கும் ...ாக போராட்டம் நீடித்துக் கொண்டிருந்தது.

...ாணுவமும். மத்திய ரிசர்வ் போலீஸ்படையும் ...நிலப் போலீசும் ஏவி விடப்பட்டாலும் மக்களுடைய ...ச்சி அடங்கவில்லை.

... சட்டமன்றத்தின் மூன்றிலொரு பங்கு எம். எல்.ஏக் 24 ராஜிஞமா செய்து விட்ட பின்னரும் கூட கிளர்ச்சி ...ல்தான — சகஜநிலை ஏற்பட்டால்தான் ...டமன்றத்தைக் கலைப்பது பற்றி ...லிக்க முடியும் என்று மத்திய அரசு இறுமாப்புடன் ...ன்று.

குஜராத் மாநிலம் முழுவதும் கிளர்ச்சித்தீ பரவியி ...போதிலும் மக்களுடைய உணர்ச்சியை மத்திய ... அறவே புறக்கணித்தது.

1958 ல் கேரளத்தில் ஒரு பகுதிமக்களே கிளர்ச்சி ...தபோதிலும் பெருமளவில் மக்கள் சாகடிக்கப்படும் ...மையோ எம். எல். ஏ. கள் ராஜிஞமா செய்யும் நிலை ...யா இல்லாதபோதிலும் அப்போதிருந்த கம்யூனிஸ்ட் ...ாங்கத்தை டிஸ்மிஸ் செய்து சட்டமன்றத்தைக்கலைத் ...மத்திய அரசு ஆனல் வரலாற்றில் கண்டிராத பேரெ...யைக குஜராததில் கண்டபின்னும் சட்ட மன்றததை ...க அது மறுத்தது.

எனினும் எழுச்சியுற்ற குஜராத் ...களின் முன் மத்திய அரசின் ...ாரம் தகர்ந்து தவிடு பொடியாகிவிட்டது.

சகஜநிலை ஏற்பட்டால்தான் சட்டமன்றத்தைக் ...பது பற்றி பரிசீலக்க முடியும் என்று மக்களுக்கு ...ால்விட்ட மத்திய அரசு, அரசியல் ...ாரக் குழுக் சட்டத்தைக் கூட்டி சட்டமன்றத்தைக் ...கும் முடிவை அவசர அவசரமாக அறிவித்துள்ளது

பட்டினிகிடக்கும் மக்கள் ராணுவத்துக்கோ, போலீ...ா பயப்படமாட்டார்கள் என்று கண்ட பின்னரே ...ய அரசு பணிந்துள்ளது.

குஜராத் சட்டமன்றத்தைக் கலைக்காவிட்டால் ...ர்ச்சி நிற்காது என்பதைக் கண்ட பின்னர்தான்—குஜ...தில் கிளர்ச்சி மேலும் தீவிரமடையப் போகிறது. ... அச்சம் ஏற்பட்ட பின்னர்தான்—வெளிமாநிலங் ...க்குக் கிளர்ச்சி பரவப்போகிறது என்ற நிலைமை ஏற் ... பின்னர் தான் மத்திய அரசு மக்கள் கோரிக்கையை ... சட்டமன்றத்தைக் கலைத்துள்ளது.

தேர்தலில் எந்த முறையைக் கையாண்டும் மிகப் ...ம்பாலான இடங்களைப் பிடித்தாலும் காங்கிரஸ் ... பலம் வாய்ந்த அரசல்ல என்பதை குஜராத் சம்ப...ள் உணர்த்துகின்றன.

மக்கள் திரண்டெழுந்துவிட்டால் இந்த அரசின் மக் ...விரோதக்கொள்கைகளை முறியடிக்க முடியும் என் ... எடுததுக்காட்டிக்கொணடிருக்கும் நிகழ்ச்சியாக ...த் நிகழ்ச்சி வரலாற்றில் இடம்பெற்று விட்டது,

## நெய்வேலி சுரங்க திட்டத்தில் தாமதம்

நெய்வேலியில் இரண்டாவது சுரங்கம் வெட்டும் ...த்தை மத்திய அரசு உடனடியாக மேற்கொள்ள ...ராக இல்லை.

சென்ற ஆண்டில் தமிழநாட்டில் மிகப் பெரியமின் நெருக்கடியைக் கண்டோம். இதனால்தொழிற்சாலை ...டப்பட்டு பல்லாயிரக்கணக்கான தொழிலாளர்கள் ...யிழந்தார்கள். பம்புசெட்டுகளுக்கு மின்சாரம் ...க்காமல் தண்ணீரின்றி பயிர்கள் கருகின.

திட்டகுறிபளவுகள் நிறைவேருமல் போனதற்கு ...ாரணங்களில் மின்சார நெருக்கடியும் ஒருகாரண... இருந்ததைக் கண்டோம்.

தமிழ்நாட்டின் தொழிற்சாலைகளுககும் மற்ற ...வகளுக்கும் நெய்வேலி மின்சார உற்பத்தியைக் ...ண்டுதான் பெருமளவில் ஈடுகட்ட முடியும்.

இந்நிலையில் நெய்வேலியில் இரண்டாவது சுரங் ... வெட்டுவதைத் தாமதப்படுத்துவது தமிழ்நாட்டில் ...பெரிய நெருக்கடியை மீண்டும் உருவாக்குவதாகும்,

எனினும் மத்திய அரசு துரிதமாக நடவடிக்கை ... மறுக்கிறது. மாநில அரசும் கைகாட்டி மரம் ... மத்திய அரசைக் காட்டிவிட்டு தன் பொறுப் ... தட்டிக் கழித்துக் கொண்டிருக்கிறது.

நெய்வேலி சுரங்கம் வெட்டும் வேலையை தாம... செய்யாமல் தொடங்க வேண்டும் என்று கோரி ... கட்சிகளும் குரல் எழுப்ப வேண்டும் என்று ...றுத்துகிறோம்.

... ப்பாளனுக்கு

# முதலாளித்துவ நாடுகள் வழங்கும் சன்மானம்

மாஸ்கோ, மார்ச் 15—

சமீப காலமாக மேலை நாட்டுப் பத்திரிகைகள் சோஷலிச சமுதாயத்தின் எதிரியான சல்செனித்சின் னின் பெயரைப் பிரமாத மாக விளம்பரப்படுத்தி வந்தன.

கருத்துச் சுதந்திரத்துக் காகப் போராடிய காரணத் தால், சோவியத் யூனியனில் அவர் "வறுமையால் வாடி வந்த தியாகி" யாகச் சித்தி ரித்து வந்தன.

ஆனல் அவரை சோவி யத் யூனியனிலிருந்து வெளியேற்றிய பின்னரோ, அந்தப் பத்திரிகைகள் அவரை அவ்வாறு சித்தி ரிப்பதில் மிகவும் சிரமப்படு கின்றன.

மேலும் மக்களுக்கும் இந் தக் கதையைக் கேட்டுக் கேட்டு அலுத்துப்போய் விட்டது.

அத்துடன் அவரைப் பற் றிய செய்திகளும் அந்தப் பத்திரிகைகளில் வாவரச் சிறுத்துக் கொண்டு வரு கின்றன. அவரைப் போற் றிப் புகழ்ந்து முதல் பக்கத் தில் கொட்டை எழுத்தில் எழுதி வந்த பத்திரிகைகளே அவரைக் கடைசிப் பக்கத் தின் கடைசோடிக்குத் தள் ளக்கூடிய சாலமும் அதிக தூரத்தில் இல்லை.

பத்திரிகைகளில் இவரை பற்றி அண்மையில் வெளி வந்த செய்தி மேலை நாட்டுப் பத்திரிகைகளுக்கு அத்தனை உவப்பாக இல்லை.

### பத்திரிகைகளின் தவிப்பு

வறுமையால் வாடியதாக வும் கொடுமையால் அவதிப் பட்டதாகவும் கூறப்பட்டு வந்த இந்த எழுத்தாளர் எப் படி மிகவும் வளமிக்க மேலை நாட்டுத் தொழிலதிபர்கள் கூடப் பொருமை கொள் ளும் அளவுக்கு, பாங்கில் அவ்வளவு பணத்தை எப் படிப் போட்டு வைத்திருந் தார் என்பதற்கு விளக்கம் கூற முடியாமல் அந்தப் பத் திரிகைகள் தவிக்கின்றன.

சல்செனித்சின்னுக்குச் சொந்தமாகக் கார்கள் இருந்தன என்றும், மாஸ் கோவுக்கு அருகில் அவருக் குச் சொந்த வீடு இருந்தது என்றும் செய்திகள் வந் துள்ளன.

மேலும் அவர் மாஸ்கோ வில் உள்ள தமது இரண் டாவது மனைவியின் வீட்டி லேயே பெரும்பாலும் வசித்து வந்தார் என்றும், மேலை நாட்டுப் பத்திரிகை நிருபர்களை அடிக்கடி முறை யாகச் சந்தித்துத் தொடர்பு கொண்டு இருந்தார் என் றும் மேலை நாட்டுப் பத்திரி கைகளே எழுதியுள்ளன.

அத்துடன் மாஸ்கோ நக ரிலேயே அவர் சோவியத்— விரோதமான அறிவாளி களின் தலைவராகப் பகிரங்க மாகவே செயல்பட்டு வந் தார் என்றும் அவை கூறி யுள்ளன.

### உண்மையெல்லாம் அம்பலம்

ஆமாம், "வறுமையால் வாடிய தியாகி"யான அவ ரைப் பற்றிய உண்மைக ளெல்லாம் அம்பலமாகி வருகின்றன.

"மாஸ்கோவில் இருந்தால் தான் என் குரலுக்குமகிமை அதிகம்" என்று கூறி அவரே இப்போது தமது நோக்கத்தைத் தெளிவாக்கி யிருக்கிருர். இதன் மூலம் மாஸ்கோவை விட்டுக் தாம் வெளியேறிவிட்டால்' தம்மை ஆதரித்து வரும் மேலை நாட்டாரின் மத்தி யில் தமக்குள்ள "மார்க கெட் மதிப்பு" விழுந்து விடும் என்ற பயத்தின் காரணமாகவே, அவா இத் தனை நாளும் மாஸ்கோவை விட்டு வருவதற்கு மனமில் லாமல் இருக்கிருர் என்ற உண்மையையும் ஒப்புக் கொண்டிருக்கிருர்.

மேலை நாட்டுப் பத்திரி கைகள் அவர் "கிரெம்ளினி லுள்ள தலைவர்களுக்கு எழு திய பகிரங்கக் கடிதத்தை" யும் வெளியிட்டுள்ளன. இது வும் மேலை நாட்டுப் பிரச சாரத்தினுல் மதி மயங்கி விட்ட நல்லெண்ணம் படைத்த பலருக்கும் தெளி வூட்ட உதவுகிறது என்றே சொல்லலாம். அந்தக் கடி தத்தில் அவர் அந்தத் தலை வர்களை மார்க்சிய சித்தாந் தத்தைக் கைவிட்டு விடு மாறு உபதேசித்திருக்கிருர்.

அவருக்கு மார்க்சியம் ஒரு "வேர்லவ படிந்த சட்டை" யாகவும், ஏற்கெனவே அது "மிகவும் கொலைகாரத்தன மாக" இருப்பதாகவும் படுகி றது.

அந்தச் சட்டைரஷ்யாவை "மூச்சு விடக்கூட முடி யாமல் திணறடிக்கிறதாம்". சல்செனித்சின் இந்தக் "கடிதத்தை" காரணத் தோடுதான் வெளியிட்டி ருக்கவேண்டும். இப்போதே அவரது "மார்க்கெட்"மேலை நாட்டில் சரிந்து கொண்டி ருக்கிறது; எனவே சில வாரங்கள் சென்ருல், அவர் எழுதுவதை யாரும்பொருட் படுத்தமாட்டார்கள்.

ஆனல் விளம்பரம் விழுந்து போகா மல் இருப்பதில் கண்ணும் கருத்துமாக இருப்பவர் சல் செனித்சின். இது அவர் மேலைநாட்டுக்கு வந்துசேர்ந்த வுடனேயே தமது "குலாக் தீவுக் கூட்டம்" என்ற நூலுக்குத் தாம் எழுதிய முன்னுரையை அவசர அவசரமாக வெளியிட்ட போதேபுலப்பட்டது. அதனை வைத்துக்கொண்டு மேலை நாட்டுப் பத்திரிகைகள் சமது சோவியத்—எதிர்ப்பு பிரச்சாரத்தை நடத்தின.

### கம்யூனிச விரோதி

இப்போதோ சல்செனித் சின்னின் "பகிரங்கக் கடி தம்" அவரது உண்மை சொரூபத்தை நன்கு அம் பலப்படுத்தி விடுகிறது. அவரை மேலை நாட்டுப் பத் திரிகைகள் "வறுமையால் வாடிய தியாகியாக"ச் சித்த ரித்து வந்ததையெல்லாம் பொய்யாகி, அவர் ரஷ்யா வையும் சோவியத் அமைப் பையும் அடியோடு வெறுக் கும் கம்யூனிச விரோதி யான கோடீசுவரரே என்ற உண்மை அம்பலத்துக்கு வந்து விட்டது.

தனது தாய் நாட்டையே

(3-ம் பக்கம்பார்க்க)

## லட்சுமிநாயக்கன்பட்டியில் விவசாயப் பெண் தொழிலாளர் கூலி உயர்வு போராட்டம் வெற்றி

போடி. மார்ச். 16—

மதுரை மாவட்டம் போடி நகர் பகுதியைச் சேர்ந்த லட்சுமிநாயக்கன் பட்டியில் விவசாயப் பெண் தொழிலா ளர்கள் கூலி உயர்வுக்காக போராடி வெற்றி பெற்ற னர்.

லட்சுமிநாயக்கன் பட்டி யில் விவசாயப் பெண் தொழிலாளர்களுக்கு தினக் கூலி ரூ.1-75தான் கிடைத்து வந்தது. ஆனல் படி அரிசி யின் விலை ரூ 4க்கு நெருங்குந் தாக உயர்ந்திருக்கிறது.

இதுபோல் மற்ற பொருட் களின் விலையும் எட்டிப் பிடிக்கமுடியாத அளவுக்கு உயர்ந்திருக்கிறது.

இதனல், பெரிதும் அவ திப்பட்ட விவசாயப் பெண் தொழிலாளர்கள் கூலி உயர்வு கோரிக்கை வைத் தனா.

தோட்ட வேலைகளுக்குத் தினக்கூலியாகரூ.3 வேண்டு மென்று கோரி, விவசாயத் தொழிலாளர் சங்கத்தின் தலைமையில் சென்ற 7-ம் தேதியன்று ஆர்ப்பாட்ட ஊர்வலம் நடத்தப்பட்டது. இதில் நூற்றுக்கணக்கான பெண்கள் கலந்து கொண் டனர். ஊர்வலத்துக்குத் தோழர்கள் ராமசாமி, ராஜு ஆகியோர் தலைமை வகித் தனர்.

மூன்றுரூபாய் தினக்கூலி வேண்டும்"— என்று உரக் கக் கோஷமிட்டுக்கொண்டு பெண்கள் ஊர்வலம் சென் றனர்.

### வேலை நிறுத்தம்

மறுநாள் பெண் தொழி லாளர்கள் வேலைக்குச் செல்லாமல் வேலைநிறுத்தம் செய்தனர்.

இதனல், ஆத்திரமுற்ற நிலச்சுவான்தாரர்கள் சிலர் தோழர்கள் ராஜுவையும் ராமசாமியையும் தாக்குவ தற்கு, விவசாயத் தொழிலா ளர் சங்க அலுவலகத்திற்கு வந்தனர். தோழர்களை ஒன் றும் செய்துவிட முடியாது என்பதைக் கண்ட நிலச் சுவான்தார்கள். "கொலை செய்து விடுவோம்!" என்று மிரட்டிவிட்டுச் சென்றனர்.

கூலி உயர்வு கோரிக்கை யில் விவசாய பெண் தொழி லாளர்கள் உறுதியாக இருந்ததைக் கண்ட நிலச் சுவான்தார்கள் கோரிக்கை சம்பந்தமாகப் பேச்சு வார்த்தை நடத்த இணங் கினர்.

விவசாயத் தொழிலாளர் களின் சார்பாக சங்கத்தலை வர் பி. ராமர், செயலாளர் ஏ. லாஸர் ஆகிய தோழர் களுக்கும் நிலச்சுவான்தார் களுக்குமிடையே பேச்சு வார்த்தை நடைபெற்றது. பேச்சுவார்த்தையின் இறுதி யில், தினக்கூலியாக ரூ. 2-50 கொடுப்பதாக நிலச் சுவான்தார்கள் ஒப்புக் கொண்டனர்.

அதன் பின்னரே விவசாயப் பெண் தொழிலாளர்கள் வேலைக் குச் சென்றனர்.

## மார்ச்27-ல் தஞ்சைமாவட்டத்தில் மாதர்கள் வெகுஜன உண்ணுவிரதம்

திருவாரூர். மார்ச் 11—

தஞ்சைமாவட்டஜனநாயக மாதர்சங்க நிர்வாகக்குழு கடந்த 9—3—74சனியன்று திருவாரூரில் தோழர் ராஜம் வெங்கடேசன் தலைமையில் கூடியது. இக்கூட்டத்தில் மாவட்ட சி. ஐ. டி. யூ.செய லர் தோழர் கோ. பாரதி மோகன் கலந்துகொண் டார். கடந்த 7-3-74 ல் நெல் லிக்குப்பத்தில் நடைபெற்ற தமிழ் மாநில நிர்வாகக்குழு வின் முடிவுகளை தோழா விசாலாட்சி நல்ல தம்பி விளக்கிக்கூறினர்.

செயலரின் இந்த விளக்க உரைக்குப்பின் 'வருகிற 27—3—74 புதனன்று தமிழ் நாடு முழுவதும் நடைபெற விருக்கும் மாதர்கள் உண்ணுவிரதப் போராட் டத்தை தஞ்சை மாவட்டத் தில் சிறப்புடன் நடத்துவ தென்றும் அதில் ஏராள மான மாதர்களை பங்குபெற செய்து மத்திய அரசு அலு வலகங்களின் முன்பு உண் ணுவிரதத்தை கீழ்க்கண்ட இடங்களில் நடததுவதென வும் முடிவு செய்யப்பட்டது. அதாவது நாகை, திருவா ரூா. மன்னை, திருத்துறைப் பூண்டி, நன்னிலம், மாயூ ரம், தஞ்சை ஆகிய 7இடங் களில் உண்ணுவிரதத்தை நடத்தவும். அதற்கான விளம்பர ஏற்பாடுகளை இப் போதே தொடங்கவேண்டு மெனவும் முடிவாற்றப்பட் டது.

### பொதுக்கூட்டம்

மாநில மத்திய அரசு களின் வரிக்கொடுமைகளை யும் விலைவாசி உயர்வை யும் எதிர்த்து மத்திய அரசு அலுவலகங்களின் முன் ஞல் நடைபெறவிருக்கும் இந்த உண்ணுவிரதப போராட்டத்தையொட்டி, அன்று 27—3—74 புதன் மாலையில் மேற்கண்ட ஏழு ஊர்களிலும் விளக்க பொதுக்கூட்டங்கள் நடத் துவதெனவும், இப்பொதுக் கூட்டங்களுக்கும், உண்ணு விரதப் போராட்டத்திற்கும் சகோதர ஸ்தாபனங்களைச் சேர்ந்த தோழர்களை வாழ்த் துரை வழங்க அழைபப தெனவும் முடிவாற்றப்பட் டது.

இந்த உண்ணுவிரதப் போராட்டத்தை கீழ்க் கண்ட விவரப்படி தோழர் கள் பொறுப்பேற்று நடத்து வர்.

நாகை...தோழர் ஏ. தமிழ ரசி, நன்னிலம்...தோழர் ஜானகிதங்கையன். திருவா ரூர் பாப்பாத்தியம்மாள், மன்னை, ராஜம் வெங்கடே சன், திருத்துறைப்பூண்டி வே. லெட்சுமி, மாயூரம் குஞ்சிதம் பாரதிமோகன். தஞ்சைதோழர் விசாலாட்சி நலலதம்பி

### சந்தா இயக்கம்

இவ்வாண்டு ஜூன் மாத இறுதிக்குள் தஞ்சை மாவட் டததில் 15000 பெண்களை ஜனநாயக மாதர் சங்க உறுப்பினர்களாக சேர்ப் பது என முடிவாற்றப்பட் டது.

## ஜனநாயக மாதர் சங்க தஞ்சை மாவட்ட நிர்வாகக்குழு

திருவாரூர், மார்ச் 14—

கடந்த மாதம் 7-ம் நாள் திருவாரூரில் நடைபெற்ற ஜனநாயக மாதர் சங்க தஞ்சை மாவட்ட சிறப்பு மாநாட் டில் தேர்ந்தெடுக்கப்பட்ட தஞ்சை மாவட்ட அமைப்புக் குழுவின் நிர்வாகக் குழு பட்டியல் கீழே தரப்பட்டுள் ளது.

தலைவர் :— தோழர், ராஜம் வெங்கடேசன்.........மன்னை
துணைத் தலைவர் :— தோழர் வே. லெட்சுமி திருத்துறை
" குஞ்சிதம் பாரதிமோகன் மாயூரம்
செயலர் :— தோழர் விசாலட்சி நல்லதம்பி சுந்தரவக் கோட்டை
துணைச் செயலர் :— தோழர் ஏ. தமிழரசி நாகை.
" ஜானகி தங்கையன், நன்னிலம்.
பொருளாளர் :— தோழர் லெட்சுமி பழனிமாணிக்கம் திருக்காட்டுப்பள்ளி.

நிர்வாகக்குழு உறுப்பினர் :—

தோழர் பி. என். டி. மனேன்மணி, திருத்துறைப்பூண்டி
" சீனியம்மாள் " "
" வீரம்மாள், நாகை
" பாப்பாத்தியம்மாள், நாகை
" கருப்பாயி, மாயூரம்
" பவனம்மாள் "
" பட்டம்மா ராமசாமி, நன்னிலம்,

## எத்தியோப்பியாவில் பாதிரியார்களும் ஸ்டிரைக்

ஆடிஸ்அபாபா, மார்ச். 14—

எத்தியோப்பியா நாட்டிலுள்ள 2 லட்சம் கிறிஸ்தவ பாதிரியார்கள் சம் பள உயர்வு கோரிக்கைக்காக ஸ்டிரைக் செய்ய முடிவெடுத்துள்ளனர்.

சம்பள உயர்வு கோரிக்கைக்காக இங்கு தொழிலாளர்களும், இராணுவத் தினரும் தொடர்ந்து வேலைநிறுத்தம் செய்து வருவதற்கிடையே இந்த அறி விப்பு வெளியாகியுள்ளது,

கிறிஸ்தவ பாதிரியார்கள் வேலை நிறுத்தம் செய்த நிகழ்ச்சி உலகவரலாற் றில் இதுவரையிலும் நடக்காததொன் றுகும்!

எத்தியோப்பியா நாடு ஹெய்லி சலாசி என்ற மன்னர் ஆட்சியின் கீழ் உள்ளது.

சம்பள உயர்வுடன், ஓய்வு கால ஊதியம், மருத்துவ வசதி போன்ற கோரிக்கைகளையும் பாதிரியார்கள் முன வைத்துள்ளனர்.

எத்தியோப்பியா நாட்டு விவசாய நிலங்களில் 20 சதவீதம் கிறிஸ்தவ கோயில்களின் ஆதிக்கத்தில் உள்ளது.

## பயங்கரமான சருக்கல் பாதை

**"குஜராத் கலவரங்கள் பாசிஸ்ட் சக்திகளின் திட்டமிட்ட தூண்டுதல் என்று மத்திய அரசு கூறுகிறது. இக் கூற்றை முற்றிலும் மறந்துவிட இயலாது"**

— தென்னகம் தலையங்கம் 14. 3. 74

அரசியல் காற்று திசை மாறியடிக்க ஆரம் பமாகி விட்டதா? மத்திய அரசின் கூற்றை **முற்றிலும் மறுத்துவிட முடியாது** என்ற பார்வை—

உணவு கோரிய மக்களைப் படுகொலை செய்த கொலைகார மத்திய அரசின் கூற்றை முற்றிலும் மறுத்துவிட முடியாது என்ற சிந்தனை—

தென்னகத்திற்கு என்றிலிருந்து உதய மாகியது?

புதுவையில் அமைச்சரவை அமைத்ததற்குப் பின்னர் ஏற்பட்ட மாறுதலா?

இது மிக மிக அபாயகரமான சருக்கல் பாதையாயிற்றே? தி. மு. க. சருக்கி அதால பாதாளத்தில் வீழ்ந்திட்ட சருக்கல் பாதை யாயிற்றே இது?

**"உண்ணுவிரதம் போன்ற முயற்சி யால் அரசை நிர்ப்பந்தத்துக்கு ஆளாக் குவது அவ்வளவு ஏற்புடைத்தானது அல்ல."**

— தென்னகம் தலையங்கம் 14. 3. 74

பதவியிலே அமருவதற்கு முன் ஒருகொள்கை பதவியிலே அமர்ந்த பின் வேறு ஒரு கொள்கை என்பதை காங்கிரசும் தி. மு. க.வும் நிரூபித்து விட்டது போலவே, அண்ணு தி. மு. க. ஏடும் நிரூபித்திட முன் வந்து விட்டதா?

உரிமைக்காகப்போராடும்மக்கள் உண்ணுவிரத முதற்கொண்டு சகல ஜனநாயக வழிமுறை களையும் பின்பற்றிப்போராட உரிமைஉண்டு என்று நேற்று வரை பிரகடனங்கள் செய்த அண்ணு தி. மு. க.வினர் புதுவை — கோவைத் தேர்தலுக்குப் பின் மாறிவிட்டனரா?

## சிலி நாட்டு அரசின் எஜமான பக்தி

சான்டியாகோ, மார்ச், 16—

சில நாட்டில் முன்னுள ஜனுதிபதி அலண்டே தனது ஆட்சி காலத்தில் (1971-ல்) தேசிய மயமாக்கிய மூன்று செம்பு சுரங்கங் களின உரிமையாளரான அமெரிக்காவிலுள்ள 'செரோ' நிறுவனத்துக்கு, 4 கோடி 18 லட்சம்டாலரை நஷ்ட ஈடாகக் கொடுத்துள் ளது. தற்போதைய ராணுவ அரசு.

இன்னும் இரு கம்பெனிக ளுக்குக் கொடுக்க வேண் டிய நஷ்ட ஈடு தொகை பற்றி பேச்சுவார்த்தைநடத் தப்பட்டு வருகிறது.

# எதிர்காலம்

— வைகறை —

[திருக்கழுக்குன்றம்]

**(திருக்கழுக்குன்றத்தில், சென்ற 24-11-73-ம் தேதியன்று "இந்திய அறிவியல் கழக"த்தின் சார்பில் நடைபெற்ற கவியரங்கத்தில் "எதிர்காலம்" என்னும் பொருளின் கீழ் பாடப்பட்ட கவிதை.)**

1 கீழ்வானம் வெளுத்திடுமுன் கலப்பை ஏந்தி
நிலமுழுது பாடுபட்டே உழைக்கும் அன்பன்
வாழ்வில் முன்னேற்ற முண்டா? அவன் குடிக்கும்
கூழுக்கும் வழியுண்டா? வகையுமுண்டா?
பாழ்வயிற்றுக் கல்லுபகல் பாடுபட்டும்
பயனின்றிப் போகின்ற உழவுத் தோழன்
ஆழ்ந்துணர்வோ டவன்வாழ்வை எண்ணிப்பார்த்தே
ஆர்த்தெழுந்தால் அன்றோ நல் எதிர்காலமே

2 எந்திரத்தோ டெந்திரமாய் செயல்படுத்தி
இந்நாட்டின் மூலதன மாகும் தோழன்
நிம்மதியாய் வாழுகின்ற நிலைமை யுண்டா?
நிச்சயமாய் அவனுயிர்க்குப் பொறுப்புமுண்டா?
சிந்துகின்ற செந்நீரும் கண்ணீரோடு
சேர்ந்தழுது மாள்கின்ற நிலையை மாற்றச்
சிந்தித்துச் செயலில் சிலிர்த்தெழுந்தால்
சிறந்திடும் நல் எதிர்காலம் புலரும் தானே

3 பஞ்சோடு போராடும் நெசவாளர்க்குப்
பாரதனில் பாதுகாப்பும் உண்டா? பாழும்
கஞ்சிக்கே போராடி போராடித்தான்
காலமெல்லாம் நொந்துழலும் கொடுமைக்கிங்கே
பஞ்சமில்லை ஆதலினால் நெசவாளர்கள்
பாருலகில் ஒன்றுபட்டு மாற்றமின்றி
அஞ்சாமல் அணிவகுத்தே ஆர்ப்பரித்தால்
அணைத்திடும் நல் எதிர்காலம் ஒளிவீசுமே!

4 பாதையிலே இரவெல்லாம் விலங்கு போலப்
படுத்துறங்கி பகலெல்லாம் பாடுபட்டும்
வேதனையைச் சுமக்கின்ற தோழரெல்லாம்
வெளியுலகச் சிந்தனையில் மூழ்கித் தம்மின்
சாதனையை நிலைநிறுத்தச் சங்கமித்துச்
சதிராடு போர்ப்பறையைத் தட்டிவிட்டால்
காதவழி ஓடிடுமே ஏற்றத்தாழ்வு
கதை முடியும் எதிர்காலம் அணைக்கும் தானே

5 பட்டங்கள் பெற்றிருந்தும் வேலையின்றிப்
பாமரர்போல் அலைகழியும் பட்டதாரி
கட்டத்தை நினைத்தாலே கண்ணீர் மல்கும்
கனலாகிச் சுட்டிடுமே நெஞ்சம்! அந்தோ!
கொட்டங்கள் அடிக்கின்றார் கோட்டைக்குள்ளே
குமுறுகின்றார் பட்டதாரி வீட்டிற்குள்ளே
திட்டமிட்டுப் பட்டதாரி திரண்டெழுந்தால்
திகழ்ந்திடுமே எதிர்காலம் மலரும் தானே

6 அதிகாரப் பேய்களுக்கே தீனிபோடும்
ஆதிக்கப் பேய்களெல்லாம் ஒன்றுகூடி
முதலாளி வர்க்கப்பேய் போர்வையோடு
முழுமூச்சாய் பாட்டாளி வர்க்கந்தன்னை
பதைபதைக்க வாட்டுகின்ற மடமை மீண்டும்
பாரதனில் நீண்டுவிட்டால் எச்சரிக்கை
உதைக்கின்ற உதை தாங்கி முடியாரோடி
ஒளிந்திடும் காலம் வெகு தொலைவிலில்லை

7 புரட்சி பூகம்பத்திற்குள் புழுவுண்டு சாகும் சாதி
வரட்டுவே தாந்தங்கள் தம் உயிருள் வெடிக்கும் யாண்டும்
புரட்டுசெய் அவதாரங்கள் போகும் கல்லறையை நோக்கி
புரட்சிபூ மிக்குள் தோன்றும் புதியதோர் உலகம் தானே!

8 எதிர்காலம் இன்றைக் கோரம் இதயத்தை வருடும் காலம்
எதிர்காலம் எண்ணும் போதே எழுச்சி கொள் புதிய வேகம்
எதிர்காலத்திலேனும் எல்லோரும் வாழ்வதற்குப்
புதியதோர் ஆற்றல் பெற்றுப் புரட்சியைச் செய்துவோமே!

# ஈரோடு மின் திட்ட தொழிலாளர் முடிவு

ஈரோடு, மார்ச் 14—

தமிழ்நாடு மின்சார தொழிலாளர் மத்திய அமைப்பின் அறை கூவலுக்கிணங்க மின் வெட்டு சம்பந்தமான அதிகப்படி வேலைகள் செய்வதில்லை. என ஈரோடு உற்பத்திவட்ட ஈரோடு மின் திட்ட சி ஐ டி யூ- சங்கம் முடிவெடுத்துள்ளது.

சென்ற ஆண்டு மின் வெட்டு அமல்படுத்த அதிகப்படி வேலை செய்த தொழிலாளிகளுக்கு மின் வாரியம "ஸ்டேகரிங்" அலவன்ஸ் என அதிகப்படி ஊதியம் வழங்கினார்கள். ஆனால் இந்த ஆண்டு மின்வெட்டு தொடர்ந்து இருந்தும் அதிக வேலைசெய்ய நேரிடும் தொழிலாளர்களுக்கு அதிக ஊதியம் வழங்க முடியாதென்று அறிவித்துள்ளது. இதை எதிர்த்து ஈரோடு திட்டத்திலும் உற்பத்தி வட்டத்திலும் (எல்.டி. சென்டர்) வரும் 15—3—74 முதல் எவ்வித அதிகவேலையும் செய்வதில்லை என ஈரோட்டிலுள்ள சி:ஐ.டி.யூ, சங்கம் தங்களது செயற்குழுவில் முடிவெடுத்துள்ளது.

# ஜனநாயக மாதர் சங்கம் தென்னாற்காடு மாவட்ட சிறப்பு மாநாடு

நெல்லிக்குப்பம், மார்ச்.15—

ஜனநாயக மாதர் சங்கத்தின் தென்னாற்காடு மாவட்ட சிறப்பு மகாநாடு நெல்லிக்குப்பத்திலுள்ள கிரிஜா பேலஸில் 8-3-74-ல் நடந்தது.

நெல்லிக்குப்பம், நெய்வேலி, வடலூர், சிதம்பரம். பண்ருட்டி, புதுப்பேட்டை, தூக்கணம்பாக்கம் நடுவீரப்பட்டு, விழுப்புரம், கடலூர், புதுக்குப்பம், தேவபாண்டலம் முதலிய ஊர்களிலிருந்து மாதர் சங்க பிரதிநிதிகள் 400-க்கு மேல் கலந்து கொண்டனர். தியாகிகளுக்கு அஞ்சலிசெலுத்திய பிறகு மாநாடு ஆரம்பமாயிற்று.

ஜனநாயக மாதர் சங்க மாநிலக் குழு உறுப்பினர் சென்னை தோழியர் விஜயா ஜானகிராமன் மாதர் சங்க கொடியை ஏற்றி வைத்து பேசும் போது மாதர்சங்கத்தின் உன்னத லட்சியங்களையும். குறிக்கோள்களையும் எடுத்துக்கூறி தாய்க்குலத்தின் உயர்வுக்குப்பாடுபடும ஜனநாயக மாதர் சங்கத்திற்கு அனைத்து மாதர்களும் ஆதரவு தருமாறு கேட்டுக் கொண்டார்.

மாநாடு ஆரம்பத்தில் இயக்கப் பாடல்களை குமாரிகள் சம்கிராஜ், சஞ்சீதா, சத்தியவாணி, தமிழரசி, முதலியவர்கள சேர்ந்து பாடினார்கள்.

மாவட்டம் முழுவதிலிருந்தும் மாநாட்டிற்கு வந்திருந்த பிரதிநிதிகளை நெல்லிக்குப்பம் மாதர் சங்கத்தைச் சேர்ந்த தமிழரசி வரவேற்று பேசினர்.

### தலைமையுரை

மாநாட்டிற்கு மாநிலக் குழு உறுப்பினரும், தெ.ஆ. மாவட்ட ஜனநாயக மாதர் சங்க அமைப்பாளருமான தோழியர் ஷாஜாதிதலைமை வகித்தா. அவர் பேசியதாவது:—

"நாடு சுதந்திரம் அடைந்து 26 ஆண்டுகட்கு மேலாகியும் வறுமை நம்மை விட்டு நீங்காதது மட்டுமல்ல மேலும் அதிகரித்துள்ளது. பெண்கள் சரிபாதியாக இருக்கும் நிலையில் பெண்களும் ஆண்களுடன் சேர்ந்து போராடினால்தான் நாட்டிலும், வீட்டிலும் வறுமையை அகற்ற முடியும். பெண்களை இழிவுபடுத்தும் நிலையைப் போக்க வேண்டும். பொருளாதாரம், சமூகம், அரசியல் இவை மூன்றையும் பார்க்க முடியாது என்று விவரமாக விளக்கியதுடன் மாதர் சங்கங்கள் ஏராளமாக அமைக்க வேண்டிய அவசியத்தையும் எடுத்துக் கூறினர்.

ஜனநாயகமாதர் சங்கத்தின் தமிழ் மாநில அமைப்பாளர் தோழர் பாப்பாஉமாநாத மாநாட்டைத் திறந்து வைத்துப் பேசுகையில் நாட்டில் வாழும் குடும்பங்களைப் பற்றியும், அக்குடும்பங்கள் படும்பாட்டைப் பற்றியும் விரிவாக விளக்கினர்.

மத்திய—மாநில அரசுகள் ஏழை மக்கள் மீது போடும் வரிகளையும் அதனல் மக்கள் படும அவதி, விலைவாசி ஏற்றத்தினல் ஏற்பட்டுள்ள கஷ்டங்கள் இவைகளை விவரித்துவிட்டு மற்ற மாநிலங்களில் பெண்கள் நடத்தும் போராட்டங்களையும் விளக்கி விட்டு ஜனநாயக மாதர் சங்கம் எல்லா விதமான இல்லங்களிலும் பெண்கள் அனைவரும் பங்கெடுக்க வேண்டுமென்று கேட்டுக் கொண்டார்.

### பங்கு கொண்டனர்

(இத்துடன் வேறிடத்தில் பிரசுரிக்கப்படும்) தீர்மானங்களை தமிழரசி, சம்கிராஜ், சத்தியவாணி, வசந்தி (நெல்லிக்குப்பம்) சாந்தகுமாரி, பத்மகாந்தி, ஜான்சிராணி, (நெய்வேலி) கோமதி, பிரேமா மைதிலி (வடலூர்) சுந்தராம்பாள் முதலியவர்கள் பிரேரேபித்துப் பேசினர். தீர்மானங்கள் ஏகமனதாக நிறைவேற்றப்பட்டன.

### நிர்வாகிகள் தேர்வு

பின்னர் தென்னாற்காடு மாவட்ட ஜனநாயக மாதர் சங்கத்திற்கு,

தலைவர் :- தோழியர் யசோதாமோகன்நெய்வேலி

துணைத்தலைவர் :- குப்பம்மாள், தூக்கணம்பாக்கம் சேது நடராஜன், கடலூர்

பொதுச் செயலாளர் :— ஷாஜாதி கோவிந்தராஜன் நெல்லிக்குப்பம்

துணைச் செயலாளர் :— பதமாவதி விஸ்வநாதன் சிதம்பரம். கஸ்தூரி, வடலூர்.

பொருளாளர் :- பியாரி பேகம், நெல்லிக்குப்பம்.

மற்றும் 17 நிர்வாகக்குழு உறுப்பினர்களும் ஏகமனதாக தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

### வாழ்த்துரைகள்

மாநாட்டை வாழ்த்தி மாதர் சங்க மாநிலக்குழு உறுப்பினர் தஞ்சை விசாலாட்சி நல்லதம்பி, சென்னை கோவிந்தம்மாள் சேலம் கந்தாயி ரெங்கசாமி, திண்டுக்கல் தனலட்சுமி பேசினர்கள்.

தென் ஆற்காடு மாவட்ட மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் எஸ், நடராஜன். தமிழ் மாநில சி ஐ. டி. யூ. செயலாளர்தோழர் சி கோவிந்தராஜன் தமிழ்மாநில விவசாயிகள் சங்க துணைச்செயலாளர் தோழர் டி. ஆர் விஸ்வநாதன் ஆகியவர்களும் வாழ்த்துரை நிகழ்த்தினர்.

### ஊர்வலம்

மேற்படி மாநாடு முடிந்ததும் மாலை 6 மணியளவில் கிரிஜா பேலஸிலிருந்து 700க்கு மேற்பட்ட பெண்கள் புதிய வரிகளை எதிர்த்தும் விலைகளைக் குறைக்கக் கோரியும், நியாய விலைக் கடைகள் திறக்கவேண்டுமென்றும் கோஷங்கள் முழக்கிக்கொண்டுநெல்லிக்குப்பம் நகரத்தில் ஊர்வலமாகச் சென்றனர்,

### பொதுக்கூட்டம்

அன்று மாலை 7 மணியளவில் நெல்லிக்குப்பம் துரௌபதியம்மன் கோவில் திடலில் ஆயிரம் பெண்கள் உள்பட இரண்டாயிரத்திற்கு மேல் ஜனங்கள் திரண்ட பொதுக்கூட்டம் ஒன்று நடைபெற்றது.

தோழியர் ஷாஜாதி கோவிந்தராஜன் தலைமை வகித்து மத்தியமாநில அரசுகளின் வரிக் கொள்கைகளைப் பேசிவிட்டு மாநாட்டு தீர்மானங்களை விளக்கினர்கள். தோழியர் பாப்பாஉமாநாத் விலைவாசி ஏற்றம், அடக்குமுறை இவைகளைக் கண்டித்துப் பேசிவிட்டு கொமாரபாளையத்தில பாத்திமா கொலை செய்யப்பட்டதற்கு கருணாநிதி அரசு உடனடியாக விசாரணை நடத்தவேண்டும் என்றும் கோரினர்.

## மாநாட்டின் கோரிக்கைகள்

### தொடக்கப் பள்ளியை புதுப்பித்தல்

நெல்லிக்குப்பம் நகர்மன்ற நிர்வாகத்தின் கீழ் நடைபெற்று வரும் தொடக்கப் பள்ளிகளில ஒன்று ஒரு சத்திரத்தில் உள்ளது. இதில் நூற்றுக்குமேற்பட்ட சிறுவர் சிறுமிகள் கல்வி பயின்று வருகின்றனர். இந்தக்கட்டிடம் பாழடைந்த விட்டதுமல்லாமல், இடிந்து விழும் நிலைமையிலும் உளளது. ஏராளமான சிறுவர் சிறுமிகள் உயிர்களைப் பாதுகாக்க வேண்டிய முனிசிபல நிர்வாகம் இதைப் பற்றி கவலைப்படாமல் பாராமுகமாய் இருந்து வருவது மிகவும் கண்டிக்கத்தக்கது.

சிறுவர் சிறுமிகளின் நலனையும உயிர் பாதுகாப்பையும முன்னிட்டுஉடனேஎவ்விதகாலதாமதமும்செய்யாமல் முனிசிபல்நிர்வாகம் இந்தக்கட்டிடததை புதுப்பிக்குமாறு இம்மாநாடு வற்புறுததுகிறது

### குடி தண்ணீர் வசதி

42 ஆயிரம் மக்கள் தொகையும் தொழிற்சாலை இருப்பதனகாரணத்தாலும். வெளியூர் மக்கள அடிககடி இந்த நகரத்திற்கு வந்துபோகும் நிலைஇருப்பதாலும் நல்ல குடி தண்ணீர் வசதி இங்கு இல்லாதிருக்கும் நிலையில் மக்கள் குடிதண்ணீர் இன்றி கஷ்டப்படுகிறார்கள்.

அரசின் உதவியைக் கொண்டு பெண்ணையாற்றிலிருந்து இந்நகருக்கு குடிதண்ணீர் கொண்டு வருவது என்று திட்டம் போட்டிருந்தும் அந்த திட்டத்தை முனிசிபல் நிர்வாகம் ஒத்தி வைத்திருப்பதாகத் தெரிகிறது. இது மிகவும் வருந்தத் தக்கதாகும்.

எனவே மேற்படி திட்டத்தை உடனடியாக செயல்படுத்தி மக்களுக்கு குடிதண்ணீர் வசதிக்கு ஏற்பாடு செய்ய வேண்டும என்று முனிசிபல் நிர்வாகத்தை இம்மாநாடு கோருகிறது.

### ஆஸ்பத்திரி, ஆம்புலன்ஸ் வசதி

இந்நகரிலுள்ள ஆஸ்பத்திரியில் போதுமான படுக்கைகள் கிடையாது.தேவையான மருந்துகளும இல்லை. அத்துடன் திடீர் என்றுஏற்படும் விபத்துக்கள். அல்லது பிரசவம், மற்ற வியாதிகளுக்கு கடலூர் மருத்துவமனைக்குச்செல்லவேண்டும். அங்கு இப்படிப்பட்டநோயாளிகளைக் கொண்டு செல்ல ஆம்புலன்ஸ் வண்டியும் இந்த ஆஸ்பத்திரியில் இல்லை, இதனல் நல்ல சிகிச்சை கொடுத்து உயிரைக் காப்பாற்ற முடியாமல்பலபேர் இறக்கவேண்டி ஏற்படுகிறது.

எனவே நெல்லிக்குப்பத்திலுள்ள ஆஸ்பத்திரியில் போதுமான படுக்கை வசதிகளும், மருந்துகளும் உத்திரவாதம் செய்து தருவதுடன் அவசர மித்த நோயாளிகளை பெரிய மருத்துவமனைகளுக்கு கொண்டு செல்ல குறைந்தபட்சம் ஒரு ஆம்புலன்ஸ் வண்டியை ஏறபாடு செய்யும்படி முனிசிபல் நிர்வாகம் மாவட்ட ஆட்சியாளர், மாநில மாவட்ட மருத்துவ அதிகாரிகள் முதலியவர்களை இமமாநாடு கேட்டுக் கொள்கிறது.

### பொது கக்கூஸ் குளியல் அறை

ஒரு சில பஞ்சாயத்து நகரங்களில் கூட ஆண்கள் பெண்கள் மல ஜலம் கழிப்பதற் தனித்தனியாக்கக்கூஸ்களும குளியல அறைகளும இருக்கும் போது இவ்வளவு பெரிய நகரமாகிய நெல்லிக்குப்பத்தில் அப்படிப்பட்ட கக்கூஸ்கள் குளியல் அறைகள் இல்லாத காரணத்தால் நகரத் தெருக்கள் அசுத்தம் அடைந்து நகர சுகாதாரமும் கெட்டுவருகிறது.

எனவே நெல்லிக்குப்பம் முனிசிபல் நிர்வாகம் உடனடியாகஆண்களும், பெண்களும் தனித்தனியாக பொது கக்கூஸ்களும குளியல் அறைகளும் கட்டித்தரவேண்டும் என்று இம்மாதம் மாநாடு கோருகிறது.

### சாக்கடை திட்டம்

நெல்லிக்குப்பம் நகரில் சர்க்கரை, சாராயம் ஆலைகளிலிருந்து வெளிவரும் கழிவு நீரிலிருந்து கொசுக்கள் உற்பத்தியாகி இந்நகரம் பைலேரியா வியாதி வரும் நகரமிது. இந்நிலையில் வீடுகளிலிருந்து வரும் சாக்கடை நீர் தெருக்களிலேயே வருகிறது. அதை அகற்றுவதற்காக உள்ள சுகாதார நிர்வாகம் இந்த வேலையைச் சரிவரச் செய்வதில்லை. இதனல் மேலும் பல்வேறு வியாதிகள் அவ்வப்போது மக்களை பாதிக்கின்றன.

எனவே பாதாள சாக்கடைத்திட்டம் ஒன்று சீக்கிரத்தில் கொண்டு வந்து நகர சுகாதாரத்தை பாதுகாக்கும்படி முனிசிபல் நிர்வாகத்தைக்கேட்டுக்கொள்கிறோம்.

### ஆபாச சினிமா வர்த்தக விளம்பரங்கள் பற்றி

நாளுக்குநாள் அருவருக்கத்தக்க வகையில் பெருகி வரும் ஆபாச சினிமா வர்த்தக விளம்பரங்களை இம்மாநாடு உள்ளார்ந்த வெறுப்புடன் கண்டனம் செய்கிறது.

முக்கால் நிர்வாணத்துடனும், காமவெறியைத் தூண்டி இளைய தலைமுறையினரைச்கெடுக்கும் முறையில் பல சினிமாக்களும்,பீடி முதல் துணிகள்வரை வரும் விளம்பரங்கள் பெண்மையை அவமானம் படுத்தும் முறையில் ஆபாசமாக இருப்பதையும இம்மாநாடு சுட்டிக்காட்டி இது குறித்து சகல பகுதி மாதர்களையும் ஜனநாயக இயக்கத்தினரையும் திரட்டி தமிழகம் தழுவிய முறையில் கிளர்ச்சி நடத்துவோம் என்று எச்சரிக்கை செய்கிறது,

### நியாயவிலைக்கடைகளில்

செங்குத்தாக உயர்ந்து கொண்டே போகும் விலைவாசி ஏற்றத்தால் வாழ முடியாமல்,கூடுதலான தாக்குதலுக்கு ஆளாகியிருக்கும் மாதர் குலத்தின் சார்பில், தமிழக ஜனநாயக மாதர் சங்கம கடந்த 21-1-74 அன்று தமிழகம் தழுவிய முறையில் நடத்தப்பட்ட தேவைப்பொருட்களை நியாய விலையில் விநியோகிக்கக்கோரும் கையெழுத்து இயக்கம், முன்வைத்துள்ளகோரிக்கைகளை உடனடியாக நிறைவேற்ற வேண்டுமென இம்மாநாடு தமிழக முதலமைச்சரை வற்புறுத்துகிறது.

நகர்ப்புறங்களிலும், கிராமப்புறங்களிலும் 500 குடும்பங்களுக்கு ஒரு நியாய விலைக்கடைவீதம் திறந்து கீழ்க்கண்ட விலையில் தேவைப்பொருட்களை வினியோகிக்க வேண்டுமென இம்மாநாடு கோருகிறது.

| பொருள் | அளவு | வீதம் |
| --- | --- | --- |
| அரிசி கோதுமை | ஒருகிலோ | ரூ 1-00 |
| சீனி | ஒரு கிலோ | ரூ 2-00 |
| பருப்பு வகை | ஒரு கிலோ | ரூ 2-00 |
| சமையல் எண்ணைகள் | ஒரு லிட்டர் | ரூ 5 முதல் 6 |
| மண் எண்ணை | ஒரு லிட்டர் | ரூ 50 |
| மலிவுத்துணி | ஒரு மீட்டர் | ரூ 1 முதல் 2 வரை |
| விறகு | ஒரு தூக்கு | ரூ 1-50 |
| ரவை | ஒரு கிலோ | ரூ 1-00 |
| மைதா | ஒரு கிலோ | ரூ 1-00 |
| குழந்தை உணவு | ஒரு கிலோ | ரூ 10-00 |

### தீண்டாமையெனும கொடுமை

நாடு சுதந்திரம் பெற்று 26 ஆண்டுகளாகியும். அரிஜன மக்களை ஒதுக்கி வைத்துக் கொடுமை செய்யும் தீண்டாமை என்ற பேய் தாண்டவமாடி வருவதைக் கண்டு இம் மாநாடு தனது கண்டனத்தை மத்திய மாநில அரசுகளுக்குத் தெரிவித்துக் கொள்கிறது.

இறந்த பின்பு சுடுகாட்டுக்கு போகும் பாதையை தடுப்பதும், குடி தண்ணீர் எடுக்க கூடாது என்று விரட்டுவதும், ஓட்டல்களில் தேநீர் அருந்துவதைக் கூட் அனுமதிக்காமல் இருப்பதும் அரிசன மக்களை மனிதப் பிறவியாகக் கூட மதிக்காத போக்கும் பரவலாக இன்னும் நீடிப்பதை மத்திய—மாநில அரசுகள் அனுமதிக்கும் போக்கில் இருப்பதையும் இம்மாநாடு வேதனையுடன் காட்டிக் கொடுக்கிறது.

தமிழக ஜனநாயக மாதர் சங்கம், இந்ததீண்டாமைக் கொடுமைகளுக்கு எதிராக ஏனைய ஜனநாயக இயக்கங்களுடன் ஒன்றுபட்டு தொடர்ச்சியாக கிளர்ச்சி செய்வது என முடிவு செய்கிறது.

### சம வேலைக்கு சம கூலி

ஒரே வேலையைச் செய்யும ஆண்களுக்கும், பெண்களுககும் கூலி கொடுப்பதில பாகுபாடு செய்வதை இம்மாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது.

இதனல், விவசாயத்திலும் தோட்டக்காடுகளிலும் வேலை செய்யும் பெண்கள் பாதிக்கப்பட்டுள்ளனர்.

தஞ்சை மாவட்டத்தில் அரசு அறிவித்துள்ள விவசாயத் தொழிலாளிகளின் கூலிச் சட்டத்திலும் இந்த பாகுபாடு கோரமாகத் தெரிகிறது.

அறுவடை செய்யும் ஆணுக்கு ரூ 3-25 கூலியும் பெண்ணுக்கு 2-25 கூலியும் என நிர்ணயித்துள்ளனர்.

ஒருகலம் அறுவடை செய்யுவதற்கு இந்தக் கூலி என்றால் அதில் ஆண் பெண் என்ற வித்தியாசப் படுத்துவது ஏன் என்று இம் மாநாடு ஆளுவோரைக் கேட்க விரும்புகிறது.

### பாத்திமா கொலை

சேலம் மாவட்டம் குமரபாளையத்தில் கடந்த 21-ம் தேதி இரவு ஷிப்டு வேலைக்குச் சென்ற பாத்திமாபீபி என்ற இளம் முஸ்லீம பெண்ணை நான்கைந்து கயவர்கள்வாயில் துணியை அடைத்து கற்பழித்து கொலை செய்த கொடுமையினைக் கேட்டு தஞ்சை மாவட்ட ஜனநாயக மாதர் சங்க மாநாடு அதிர்சசியடைகிறது.

தமிழகத்தில் தஞ்சை போலீஸ் நிலையத்தில கற்பழிதது கொல்லப்பட்ட ஜாமீலா, திண்டுக்கல் ரயில் நிலையத்தில் 3 பெண்கள் ராமேஸ்வரத்தில ஒருபெண் இவ்வாறு தொடாநது கற்பழிக்கும கயமைததனம நிகழ்ந்து வருவதை சுட்டிக் காட்டுவதுடன் கண்ணகிக்கு சிலை எடுத்து பூம்புகாரில் விழா நடத்தும் தமிழக அரசு இந்தப் பிரச்சினையில் அலட்சியமாக இருப்பதை இம்மாநாடு வன்மையாகக் கண்டிக்கிறது.

உடனடியாக நீதிபதியைக் கொணடு பாரபட்சமற்ற நீதி விசாரணை நடத்தவும் குற்றவாளிகளைக் கைது செய்து சிறையிலடைக்கவும், குமாரபாளையம் காவல் துறையின் சப்-இன்ஸ்பெக்டர் குற்றவாளிகளைத் தப்புவிக்க உதவியதற்காக அவரை சஸ்பெண்ட் செய்து விசாரிக்க வேண்டுமெனவும், தமிழ அரசாங்கத்தை இம்மாநாடு வலியுறுத்துகிறது.

### மாணவர் மாணவிகளுக்கு பஸ்ஸில் அரைக்கட்டண[ம்]

இந்நகரிலிருந்து ஏராளமான பள்ளிச சிறுவர் சிறுமிகள் கடலூரிலுள்ள கல்வி நிலையங்களுக்கு தினசரி செல்ல வேண்டியுள்ளது.

இவர்கள் அனைவரு[ம்] ஏழைப் பிள்ளைகள், இவர்களிடமிருந்தும் முழுக் கட்டணம் தான்யஸ்ஸில் வசூலிக்கப்படுகின்றன. இதனல்இந் ஏழைப் பிள்ளைகள் பாத[ிக்கப்படுகின்றனர்]

(4-ம் பக்கம் பார்க்க)

(2ஆம் பக்கத் [தொடர்ச்சி])

...லரின் படைகளிடம் ...டிக்கொடுத்த ரஷ்யத் த...பதியான ஜெனரல்விலாசோவை, சல்செனித்சின் பாராட்டி எழுதியிருப்பதிலிருந்தே சல்செனித்சின் எவ்வளவு பெரிய "தேச பக்தர்" என்பதைப் புரிந்து கொள்ளலாம்.

இப்போதோ அவர் மார்க்சிய—லெனினிய அடிப்படையில் அமைந்த சோவியத் அமைப்பை மாற்ற வேண்டும் என்பதே தமது விருப்பம் என்று பகிரங்கமாகவே கூறிவிட்டார்.

### வெளியேற்றுவதில் வியப்பு என்ன?

இவற்றையெல்லாம் பார்க்கும்போது, சோவியத் அரசாங்கம் அவரை வெளியேற்றியதில் வியப்பதற்கு என்ன இருக்கிறது?

அவர்கள் முன் எழுந்த கேள்வி தெள்ளத் தெளிவானது; கருத்துச் சுதந்திரத்திற்காக போராடுபவர் என்று தமக்குத்தாமேவிளம்பரம்செய்து கொண்ட இந்த நபரை, சோவியத் நாட்டில் கம்யூனிச விரோதக் கருத்துக்களை வெறித்தனமாகப் பரப்பிக் கொண்டிருக்க அனுமதித்துக் கொண்டிருப்பது சரியா? அல்லது முதலாளித்துவ உலகுக்குத் தன்னைத்தானே விற்று முத லாக்... விட... நபகூ... வெ... மூலம் சமூ... டியமைக்கு... காக ... மக்கள் ... களை எல்... பது நல்... கேள்வி.

மார்க்சியம் எ... யர்களுக்குப் பொ... கொலைகாரத் கன... சாட்டை" என்று வகு... சல்செனித்சின். மேலை... டினரின் ஏகாதிபத்தி... தையோ, நிறவெறியை... காலனி யாதிக்கத்தை... முதலாளித்துவத்தை... எதிர்த்து ஒரு வார்த்... கூடக் கூறவில்லை என... நினைவுகூரத் தக்கதாகும்.

### சிந்தித்து பார்க்கும் கால[ம்]

எனவே சல்செனித்ச... னைப் பற்றிப் பிரமாதப்ப... திப் பேசிக் கொண்டி... போர் எல்லாம் சற்று நி... னமாகச் சிந்தித்துப் பா... கும் காலம் வந்து விட்ட... என்று சொல்லவேண்... எவ்வாறுயிலும், அவர் இ... மேல் ரஷ்ய மக்களைக் க... னிசத்தின் பிடிப்பிலிரு... விடுவிடுக்கும் விடுதலை வீ... என்று நாடகமாடுவதை... காட்டிலும், பாங்கிலுள்... தமது பணத்தைப் பெருக்... வதில் தான் கவனம் செலு... துவார் என்பதே எதார்த்... உண்மையாகும்.

## ரெயில் போக்கு வரத்து மேலும் சீர்குலைவு

புதுடெல்லி, மார்ச். 16—ரெயில்வே 'கார்டுகள்' தொடர்ந்து தங்கள் சம்பள உயர்வு உள்ளிட்ட கோரிக்கைகளுக்காக விதிப்படி வேலை கிளர்ச்சி, கூட்டாக லீவ் போடும் கிளர்ச்சி போன்றவற்றை நடத்தி வருகின்றன.

இதனல் ரெயில் போக்குவரத்து மேலும் சீர்குலைந்துள்ளது. இதற்கிடையே இன்று இரண்டபவது நாளாக ரெயில்வே துணை அமைச்சர் குரேஷி கார்டுகள் கவுன்சில் தலைவர்களுடன் பேச்சுவார்த்தை நடத்துகிறார். பேச்சுவார்த்தை பயனுள்ளதாகஇல்லை என சங்க நிர்வாகஸ்தர் ஒருவர் கூறியுள்ளார்.

## சினிமா அதிபர்-பஞ்சாப் அரசு கூட்டு கொள்ளை அம்பலம்

சண்டிகர், மார்ச். 16—

பஞ்சாப் மாநில இந்திரா காங்கிரஸ் அரசு ஜாமீன் நின்று ஒரு பட அதிபருக்கு 10 லட்சம ரூபாய் பாங்க் கடன் கிடைக்க உதவியுள்ளது.

பட அதிபர் பணத்தைத் திருப்பிக் கொடுக்காததால் வட்டியுடன் அந்தப் பணத்தை பாங்குக்கு பஞ்சாப் அரசு கட்டியது

அந்த பட அதிபரிடமிருந்துபணத்தை வசூல் செய்ய மாநில அரசு எந்த நடவடிக்கையையும் எடுத்துக்கொள்ளவில்லை,

இதுகுறித்துவிசாரணை நடத்தவேணடுமென்று பஞ்சாப மாநில பொதுக் கணக்குக் குழு அரசைக் கேட்டுக கொணடுள்ளது.

...ளியின்

# ...கா கே...லா கம்பெனி ...ழல் மலிந்துள்ளது

## நாடாளுமன்றத்தில் தோழர் ஹிரேன்முகர்ஜி குற்றச்சாட்டு

புதுடில்லி, மார்ச். 17— ...மெரிக்க முதலாளியால் ...தியாவில் நிறுவப்பட் ...ள கோககோலா ...பனியின் கொடுக்கல் ...சல் நடவடிக்கைகளில் ...றமெடுக்கும் ஊழல் ...ந்து கிடப்பதாக ...லிமெண்டில் மார்க் ...ட் கம்யூனிஸ்ட்கட்சி ...பார்லிமெண்ட் உறுப் ...ர் தோழர் ஹிரேன் ...ர்ஜி குற்றம் சாட்டினர்.

...மலும் அவர் பேசுகை ... கோககோலாவிவகாரம் ...ற்றமெடுத்ததாக இருக் ...து என குறிப்பிட்டார்.

### ...ககோலாவிற்கும் ...மெரிக்காவா?

...கோககோலா போன்ற ...ளிர்பானங்களைக்கூட ...ந்தியாவில் தயாரிக்க ...ன்னிய நாடுகளை சார்ந் ...ருப்பதைக் கண்டித்தார்.

...கோககோலா போன்ற ...னங்களை இந்தியாவில ...யாரிக்க முடியாத அள ...க்கு என்ன திறமைகள் ...தவையோ எனக் கேட் ...டார்.

...இதனை தயாரிப்பதற்கு ...றுசதவீதம் அன்னியர் ...ளைசார்ந்திருக்க வேண்டிய ...வசியமென்ன என்றும் சேட்டார்;

### உடலுக்கு தீங்கானது

இப்பிரச்சினை மீது சோழர் ஜோதிர்மாய்பாசு பேசுகையில் கோககோலா மனிதர்கள் உபயோகிக்கக் கூடாத ஒன்று என்றும் அப்பானத்தை குடிப்பவர் களின் குறிப்பாக குழந்தை களில் உடல் நலத்திற்கு தீங்கு விளைவிக்கக் கூடியது என்றும் அவர் குறிப்பிட் டார்.

தனது விவாதத்திற்கு ஆதாரமாக கோககோலா பற்றிதேசியசத்துணவுஆய் வுக்கூடத்தின்அறிக்கையில் கோககோலா உற்பத்தியை உடனடியாக தடுக்கவேண் டும் எனக் குறிப்பிட்டிருப் பதை மேற்கோள் காட்டி ஞர்.

மேலும், அவர் பேசுகை யில் கோககோலா சம்பெ னிக்கு இந்திய அரசாங்கம் சலுகைகள் காட்டுவதாக வும குற்றஞ்சாட்டினர்.

### அமைச்சரின் மழுப்பல்

இவர்களின் குற்றச்சாட்டு களுக்கு பதிலளித்த அமைச் சர் அக்கம்பெனி தனது சுய முயற்சியால்தான் முன் னேறிக் கொண்டிருப்பதாக வும், ஊழல் எதுவும் நடை பெறவில்லை என்று கூறி மழுப்பினர்.

மேலும் அக் கம்பெனியில் நேரடியாகவும் மறைமுக மாகவும் சுமார் ஒரு லட் லட்சத்து 10 ஆயிரம்மக்கள் வேலை செய்கின்றனர் என்றார் அமைச்சர்.

### கோககோலாவின் கொள்ளை எவ்வளவு?

மேலும் இக் கம்பெனி யின் வரிகள் மூலம் இந்தியாவின் கஜானு வுக்கு ரூ. 10 கோடி ரூபாய் கிடைப்பதாக அக் கம்பெ னிக்கு வக்காலத்து வாங் கிய அமைச்சர் அக் கம் பெனியின் லாபமாக அமெ ரிக்க முதலாளியின் இரும் புப்பெட்டிகளுள் எவ்வளவு குவிகிறது என்பதைக்கூற வில்லை.

### அற்பத்தனமானதாம்

கோககோலா பிரச்சினை மீது நடைபெற்ற விவாதத தின்போது கோககோலா எவ்வித துன்பமும் விளைவிக் காதது என சுதந்திராகட்சி உறுப்பினர் ஒருவர் தனது அமெரிக்க பத்திரிகையைக் காட்டிக்சொண்டார்.

பி. வி. நாய்க் என்னும் காங்கிரசு உறுப்பினர் இப்பிரச்சினைபற்றி பார்லி மெண்டில் பேசுவது அற்பத் தனமானது எனக்கூறி தனது மேதாவிலாசத்தைக் காட்டிக்கொண்டார்.

## புது கப்பல்கள்

புதுடெல்லி, மார்ச். 13— 18,0000 டன் எடையுள்ள பத்து புதிய கப்பல்களுக்கு இந்தியா ருமேனியாவிடம் ஆர்டர் கொடுத்துள்ளது. ஒருகப்பல்ஏற்கனவேபெறப் பட்டு விட்டது.

மீதி 1976 ஜனவரிமாதத் துக்குள் கிடைக்கும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ஹிந்துஸ்தான் கப்பல் கட் டும் நிறுவனத்திடமும் 12கப் பல்களுக்கு ஆர்டர் கொடுக் கப்பட்டுள்ளது. இவற்றுள் ஒன்பது கப்பல்கள் ஐந்தா வது திட்டக் காலத்தில் கிடைக்கும்.

### மதுரை நகர

## ஜனநாயக மாதர் சங்க கூட்டம்

மதுரை, மார்ச். 15— ஜனநாயக மாதர் சங்கத் தின் மதுரை நகர் நிர்வா கக் குழுக் கூட்டம் மார்ச் 15ந் தேதி நடைபெற்றது. பி.நாகம்மாள் தலைமைவகித் தார்.

15 உறுப்பினர்க்கள் கலந்து கொண்டார்கள்.

விலைவாசி உயர்வை கண் டித்தும், பட்ஜெட்டைக் கண்டித்தும் 27-ம் தேதி நடத்தும் உண்ணாவிரதப் போராட்டத் திட்டமும கூட் டத்தில் உருவாக்கப்பட்டது

## குஜராத் சட்டமன்றம் கலைக்கப்பட்டது

புதுடெல்லி, மார்ச். 16— குஜராத் மாநிலத்தில், பெரு வெள்ளம் போன்ற மக்க ளின் எழுச்சிக்குமுன் தாக் குப் பிடித்து நிற்க முடியா மல் காங்கிரஸ்ஆட்சியாளர் கள் குஜராத் சட்டமன்றத் தை நேற்று (மார்ச். 15) கலைத்தனர்.

குஜராத் சட்டமன்றம் கலைக்கப்பட்டதாக நேற்று இரவு 11 மணிக்கு மாநில கவர்னர் கே. கே. விஸ்வ நாதன் நிருபர்களிடம் அறி வித்தார்.

கொடும் பட்டினிக்கு எதி ராகவும் பட்டினிக்குள்ளாக் கிய காங்கிரஸ் பேயாசுக் கும், அதன் நாற்றமெடுத்த ஊழலுக்கு எதிராகவும், சட்டமன்றத்தைக் கலைத் திட வேண்டுமென்றும் கடந்த 2 மாதங்களுக்கு மேலாக குஜராத் மாநிலத் தில் லட்சோப லட்ச மக் கள் போராட்டக்களத்தில் இறங்கினர்.

நேர்றுடன் மக்களின் ஆவேசப்போராட்டம் 64—வது நாள். இது வரை அரசின் கணக்குப் படி 87 பேர் சுட்டுக் கொல் லப்பட்டனர். (ஆனல் உண் மையில் கொலலப்பட்டவர் கள் எத்தனைபேரோ...)

சட்டமன்றம் கலைக்கப் பட்டதைக் கேள்வியுற்ற மக்கள் மகிழ்ச்சி பெருக்கு டன் தெருக்களில் வந்து ஆனந்தக் கூத்தாடினர்.

மத்திய அமைச்சரவை யின் கூட்டத்திலேயே குஜராத் சட்டமன்றத்தைக் கலைக்க முடிவு செய்யப் பட்டதாகத் தெரிகிறது.

அரசியல் விவகாரக் கமிட்டியிலும் 15-ம் தேதி யன்று இரவு இது குறித்து ஆலோசிக்கப்பட்டது.

சட்ட மன்றத்தை மட்டும் கலைத்துவிட்டு மக்களின பட்டினியைக் களைக்காமல் காங்கிரஸ்ஆட்சியாளர்கள் விட்டு விடுவார்களேயானுல் பட்டினிக்கு எதிராக மூளைத்த போராட்டம் தொடர்ந்து நீடிக்கும்.

## 'எந்த டாக்டரையும் பழிவாங்கக் கூடாது'

### டெல்லி டாக்டர்கள் போராட்டம் நீடிப்பு

புதுடில்லி, மார்ச், 16— டெல்லி இளம் டாக்டர் கள் இன்று 75-வது நாளாக வேலைநிறுத்தம் செய்துள் ளனர். பழிவாங்கும் நட வடிக்கைகள் ரத்து செய் யப்படும் வரை போராட் டம்தொடரும் என்றுநேற்று கூடிய பொதுக்குழு கூட் டம் ஒருமனதாக முடி வெடுத்துள்ளது.

அரசே தயாரித்த நிர்பந்த நகல் ஒப்பந்தத்தில் கையொப்பமிட இளம டாக்டர்கள் புறக்கணித்து விட்டனர்.

போராட்டக்குழு விடுத் துள்ள ஒரு அறிக்கையில், "எங்கள் போராட்டம் பணத்திற்காக அல்ல கொள்கைக்காக" என்று குறிப்பிடப்பட்டுள்ளது.

## செவ்வாய் கிரகத்தில் சோவியத் ஆராய்ச்சி

மாஸ்கோ, மார்ச். 15— செவ்வாய் கிரகத்துக்கு சோவியத் யூனியன் அனுப் பிய மார்ஸ்-7 என்ற செயற்கை கோள் மார்ச்9ந் தேதி செவ்வாய் கிரகத்தின் சுற்றுக்கு வந்தது.

எனினும் பழுது ஏற்பட்ட தால் அது செவ்வாய் கிர கத்தில் இறங்காமல் வேறு வழியில் சென்றுவிட்டது.

செவ்வாயிலிருந்து 1,300 கிமீட்டர் தொலைவில் அது நெருக்கமாக வந்தது.

மார்ஸ்-7 கோளிலிருந்து பிரிந்த கூண்டு செவ்வாய் கிரகத்தை அடைந்தது. அது இறங்கும்போது செவ்வாய் கிரகத்தின் வெப்பநிலையைப் பற்றிய விவரம் தாய்க் கப்பலுக்கும் அங்கிருந்து பூமிக்கும் போயிற்று. எனி னும் கூண்டு கிரகத்தில் இறங்கியதும் ரேடியோ தொடர்பு அற்றுபோயிற்று

செவ்வாய் கிரகத்தின் தென் மண்டலத்தில் கரியமில வாயுவும் நுண்ணுயிர்களும் இருக்கக் கூடும் என்று கருதப்படும் பகுதியில் கூண்டு இறங்கி யது. செவ்வாயில் உயிரி னம் இருக்கிறது என்று கண்டு பிடிப்பதுதான் சோவியத் முயற்சியின் நோக்கமாகும்.

## வியட்நாமின் வெற்றிகள்..

(...-ம் பக்கத் தொடர்ச்சி)

கிட்டியது. உலக தொழிலாளி வர்க்கத் திடமிருந்தும், மக்களிட மிருந்தும் உதவி கிட்டியது. அமெரிக்க மக்களே மிகுந்த அனுதாபம் காட்டினர்.

எல்லா பகுதி மக்களுக் கும் அவர்களுடையகடமை யைச் செய்ய சர்வதேசப் பாட்டாளி வர்க்கப்பதாகை வழிகாட்டியது.

இந்த வீரஞ்செறிந்த போராட்டத்தின் விளைவாக பாரிஸ் உடன்பாடு ஏற் பட்டது.

இந்த உடன்பாடு வியட் நாம் மக்களின் பெரும் வெற்றியையும் உலகின் சுதந்திர சக்திகளின் பெரு வெற்றியையும்குறிக்கிறது.

ஆனல் ஏகாதிபத்திய வாதிகள் அவர்களுடைய பழக்கத்தை மறக்க மாட் டார்கள். இந்த உடன் பாட்டை அவர்கள் மீறி வருகிருர்கள்.

### அமெரிக்க சதி திட்டம

அமெரிக்க அரசாங்கம் நவீன காலனியாதிக்கச் சதித்திட்டத்தை உருவாக் கிக்கொண்டு தென் வியட்நாம் உள் விவகாரங் களில் தலையிட்டுக் கொண் டும் இருக்கிறது. வியட் நாம் மண்ணிலிருந்து கடைசி மனிதன் வரை திரும்பப் பெறுவதற்குப் பதில அமெரிக்க "சிவிலி யன்ஆலோசகர்கள்",என்ற போர்வையில் ராணுவத தினரை விட்டுள்ளது. நிகு யன் தியூ கும்பலுக்கு அது தொடர்ந்து ராணுவ உத வியை அளித்துக் கொண் டிருக்கிறது.

ஏகாதிபத்ய வாதிகளும் அவர்களுடைய கைபொம் மைகளும் எவ்வளவு எதிர்ப் புக்காட்டினுலும் உடன் பாட்டை உடைப்பதற்கு அவர்கள் அனுமதிக்கப்பட மாட்டார்கள. அதை அமு லாக்கவே வேண்டியிருக் கும். இந்திய தொழிலாளி வர்க்கத்தின் முற்போக்கு சக்திகளின் கோரிக்கை அது என்றும் இப்போது தெரிவிக்க விரும்புகிறேன்.

### சரியான தலைமை

வியட்நாம் ஜனநாயகக் குடியரசின் தொழிலாளர் கட்சியின், அரசாங்கத்தின் சரியான தலைமைகாரண கவே வியட்நாம் மக்கள் இத்தகைய புகழ்செறிந்த சாதனைகளை ஈட்ட முடிந் தது.

நண்பர்களே, அருமைத் தொழிலாளர்களே! எங்க ளுடைய தொழிலாளி வர்க் கம் உங்களுடைய ராணுவ வீரசாகசத்தைக் கண்டு மட்டும் வியப்புறவில்லை. உற்பத்திதுறையில் உங் களுடைய ஆற்றுதலைக் கண்டும் நாங்கள் வியப்புறு கிருேம. இந்த ஆற்றலால் தான் உங்களுடைய தொழிற்சாலைகளை உங்க ளால இயங்கச்செய்யமுடிந் தது.

பி. 52 விமானங்களும், எப்—111 விமானங்களும் குண்டு வீசிநாசகரமாகத் தாக்கிய பின்னும் இவ்வளவு விரைவில் பொரு ளாதாரபுன ருத்தாரணம் செய்ய முடிந்தது வியட் நாம் தொழிலாளர்களின் மக்களின் மகத்தான உற் பத்தி சக்தியால்தான் சாத் தியமாயிற்று.

உழைக்கும்மக்கள் கட்சி காட்டிய வழியைத் தொழி லாளர்கள் பின்பற்றி துரித மாக இடம் பெயரச் செய்து தொழிற்சாலைகளைப் பரவ லான இடங்களில் நிறுவி அமெரிக்கஏகாதிபத்யவாதி களுக்கு மற்றொரு தோல்வியை உண்டாக்கி னர்.

### பிரமாண்ட உற்பத்தி

பழுது பார்க்கும்பணியை துரிதமாக நிறைவேற்றிய தின் மூலம் இந்த ஆண்டில் சென்ற ஆண்டை விட் இருமடங்கு மின்சார உற் பத்தியை நீங்கள் செய்ய முடிந்தது. இடம் பெயரச் செய்த யந்திரங்களை வேறு இடங்களில துரிதமாக நிறுவி இஞ்சினீயரிங் தொழிலை நீங்கள் முன் னேறச் செய்துள்ளீர்கள். பல தொழில் களில் நீங்கள் 15 லிருந்து 20 சதவிகிதம் வரை இலக்குகளுக்கும் அதிகமான உற்பத்தியைச் செய்து குவித்துள்ளீர்கள்.

யுத்தத்தில் மட்டுமின்றி சமாதான சமயத்திலும் நீங் கள்வெற்றிகண்டுள்ளீர்கள் நாசகரமான குண்டு வீச் சுத் தாக்குதலின் கீழ் வியட் நாம் மக்களின் இந்த மாபெரும் உற்பத்தி முயற் சியும் சோசலிஸ்ட்நிர்மாண சகாப்தமும் உலகின் உழைக்கும் மக்கள் நினை வில் என்றும் நிலைத்து நிற்கும்.

அமெரிக்க ஏகாதிபத்தி யத்தின் அதன் கைப் பொம்மையின் ஆக்கிர மிப்பிலிருந்து வியட்நாம் முழுவதும் விரைவில் விடு பட்டு ஒன்றுபட்ட மக்களை தங்களுடைய நாட்டைஉரு வாக்கி சோஷலிசட்பாதை யில் சுபீட்சம் கொழிக்கச் செய்வார்கள் என்பதில் சந் தேகமில்லை.

### அமெரிக்க எதிர்ப்பு

அமெரிக்க ஆக்கிரமிப்பா ளர்களையும அவர்களுடைய பொம்மைகளையும் வீரஞ் செறிந்த லாவோஸ், கம போடிய மக்கள் தூக்கி எறிந்துவிட்டு இந்தோ சீன முழுவதையும் சுதந் திரம் பெற செய்வார்கள். என்பதில் சந்தேகமில்லை.

தோழர்களே! வியட்நாம் மக்களுக்கு ஒவ்வொரு வழி யிலும் உதவுவதைஇந்தியா வின் தொழிலாளி வர்க்க மும், முற்போக்கு பகுதி யினரும தங்களுடைய கடமையாகக் கருது கின்றனர்.

மீண்டும் நான் ஒருமைப் பாட்டுணர்ச்சியையும் நட புணர்ச்சியையும் தெரி வித்து ஏகாதிபத்தியத்தை எதிர்த்து ஒன்றுபட்ட வியட நாமை நிர்மாணிக்கும போராட்டத்தில் வெற்றி கிட்ட வாழ்த்துகிறேன். உங் கள் மாநாடு வெற்றிபெற வாழ்த்துகிறேன்.

இந்த மாநாட்டைப் புனர மைக்கும் சோஷலிசத்தை அமைக்கும் மாபெரும் பணி யாய் தொழிற்சங்கங்களுக் கும் தொழிலாளி வர்க்கத் துக்கும் உதவேகம் ஊட்டும் என்பதில சந்தேகமில்லை.

வியட்நாம்-இந்திய தொழி லாளி வர்க்கத்துக்கிடையே சகோதர தொழிலாளி வர்க்க ஒருமைப்பாடு நாள் தோறும் வளரட்டும்.

சர்வதேசப் பாட்டாளி வர்க்க ஒற்றுமைப் பதாகை மேலும உயரட்டும்.

அமெரிக்க ஏகாதிபத்தி யத்துக்குஎதிரான போராட் டத்தில் அந்தப்பதாகை வழி காட்டட்டும்.

## அமெரிக்க சதிகளை...

(1-ஆம் பக்கத் தொடர்ச்சி)

னணியானது, பலன் உள்ளதாகவும் நடைமுறை சாத்தியமுள்ளதாகவும்இரு பதற்கு, இது எப்படிப்பட்ட சக்திகளைத் தன்னகத்தே கொண்டிருக்க வேண்டும் என்பதைப் பார்க்க வேண்டும்.

அமெரிக்க ஏகாதிபத்திபத்திற்கு எதிராகவும், அதனுடைய ஆசியக் கூட் டாளிகளுக்கு எதிராகவும் நிற்கின்ற இதர ஆசிய நாடுகளுடன் கூடவே, இன்னும் பல மாபெரும் சக்திகள் அணிவகுத்து நிறக வேண்டும்.

உலகத்திலேயே மிகமிக அதிகமான மக்கள் பெருக்கத்தையுடையதும், மாபெ ரும்வல்லமையுமிக்க சோசலிஸ்ட்சீனவும் சேரவேண்டும்; கொரியா மக்களின் ஜனநாயகக் குடியரசும் இருக்கவேண் டும்; வியட்னும் ஜனநாயகக் குடியரசும் இருக்கவேண்டும்.

இந்த நாடுகளும் இந்த முன்னணி யில் இருக்கவேண்டியதானது, இந்த முன்னணியே நடைமுறை சாத்திய மானதாகவும், பலனுள்ளதாகவும் இருப் பதற்கு முழுக்க முழுக்க தேவையா கும். ஏனென்ருல், இந்த நாடுகள்தான் அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளும், அவர்களது கூட்டாளிகளும் தொடுத்த ஆக்கிரமிப்பு யுத்தங்களினல் மிகப் பெரிய கஷ்டங் களை நீண்ட காலமவரை அனுபவித்தவர் கள்.

### சோவியத் போக்கு

ஆசியப்பாதுகாப்பு ஒப்பந்தம் ஏற்பட வேண்டுமென்று சோவியத் தலைவர்கள் கூறுகின்றபோது. மேலே கண்டவாறு திட்டவட்டமான, தெள்ளத் தெளிவான குறிக்கோள்களுடன் வெளிவராததால், சீனத் தலைவர்கள் இதை தங்களுக்கு விரோதமான கூட்டணியாகக் கருதுகிருர் கள்.

அதாவது சோவியத்துக்கும் சீன வுக்கும் முரண்பாடுகள் முற்றிக்கிடக்கும இச்சந்தர்ப்பத்தில்— ஆசியப்பாது காப்பு ஒப்பந்தம் யாரை எதிர்த்து என்பதைத தெட்டத்தெளிவாக சோவியத் தலைவர் கள் வெளியிடாததால், இந்த ஆசியப் பாதுகாப்பு ஒப்பந்தமானது, சீன அரசுக்கு எதிராகத் திருப்பப்பட்டுள்ள இன்னொரு நடவடிக்கை என்று சீனத்தலைவர்கள் கருதுகிருர்கள். மற்றும் அமெரிக்காவுடன் சேர்ந்து கொண்டு சீனவுக்கு எதிராக சூழ்ச்சி செய்வதாகவும் கருதுகிருர்கள்.

### சீனுவின் போக்கு

அதே சமயத்தில் ஜப்பானிலும், பசிபிக் மகாசமுத்திரத்திலும் தென்கிழக்கு ஆசியாவிலும், இந்துமகாசமுத்திரத்திலும் அமெரிக்க யுத்ததளங்களைப் பற்றி சீனத் தலைவர்கள் மவுனம் சாதிக்கிருர்கள், ஒரு வேளை சோவியத்துக்கு அவையெல்லாம் ஒரு முட்டுக்கட்டையாக விளங்கும்என்று கருதி அவர்கள் அமெரிக்காவின போக்கை ஆதரிப்பதாகக்கூட இருக்க லாம்.

சீனுவின் இந்தப் போக்கானது அமெரிக்க ஏகாதிபத்யத்துக்கு எதிரான போராட்டத்துக்கு தீங்கு விளைவிக்கும் போக்காகும் என்று நமது கட்சி கருது கிறது.

### இருவர் செயலும் உலகத்துக்கு தீங்கே

நமது கட்சி மீண்டும் மீண்டும் பிர கடனம் செய்வது இதுதான்.

சோவியத் தலைவர்களும் சீனத்தலை வர்களும், அமெரிக்க வல்லரசுடனும் மற்றுமுள்ள ஏகாதிபத்ய வல்லரசுகளுட னும் உறவுகளை அபிவிருத்தி செய்யும் முயற்சியில் அவர்கள் தத்தம் அயல் நாட்டுக் கொள்கையின் குறுகியகாலத் தேவைகளை நாடுகிருர்கள்.

அதற்காக அவர்கள் மேற்கொள் ளும் நடவடிக்கையானது, தேசவிடுதலை இயக்கங்களுக்கும் உலகப்புரட்சிகர லட்சியத்துக்கும் சேதம் விளைவிக்கிறது.

### நல்லதே நடக்கும் என நம்புகிறோம்

நமது கட்சி நம்பிக்கையுடன்தான் இருக்கிறது சோவியத்யூனியனுக்கும் சீன வுக்குமிடையேயுள்ள தன்றைய வேறு பாடுகளும், முரண்பாடுகளும விரைவி லேயே தீர்க்கப்படுமென்றும்— அவர்கள் ஆசியாவின் ஜனநாயக, ஏகாதிபத்திய எதிர்ப்பு அரசுகளுடனும், சக்திகளுட னும ஒன்றுபட்டு நிற்பார்கள் என்றும் நம்புகிருேம்.

அவ்வாறு ஒன்றுசேர்ந்து நின்று பரஸ்பரம் ஒத்துழைப்பும் உதவியும் செய்து கொண்டு—பரிபூரணமாக ஏகாதி பத்தியப் பிடிப்பை அதற்கு முதற்படி யாக அமெரிக்க ஏகாதிபத்தியப் பிடிப்பை அழித்து ஒழித்திட ஒரு உண்மையான ஆசிய பாதுகாப்பு ஒப் பந்தத்தை உருவாக்குவார்கள் என்று நம்புகிருேம்.

### சோவியத், சீனவுடன் இந்தியா உறவு கொள்க

இவையெல்லாம் நடைபெறுவதற்கு இந்திய சர்க்காரானது, சோவியத்யூனி யனுடனும் சோசலிஸ்ட் சீனவுடனும் நட்புறவுகளை நிலைநாட்டவும், மேலும் அபிவிருத்தி செய்து கொள் ளவும் ஆனதொரு கொள்கையகைப் பிடிக்க வேண்டும்.

அமெரிக்க ஆக்கிரமிப்புச் சதிகளை யும், இந்துமகா சமுத்திரத்தில் அது இராணுவ தளங்கள் அமைப்பதில் முனைந் திருப்பதையும் சின்னாபின்னமாக்கிட, ஆசியாவிலும் ஆப்பிரிக்காவிலும உள்ள ஏகாதிபத்ய எதிர்ப்பு சக்திகளுடனும், ஏகாதிபத்ய எதிர்ப்பு நாடுகளுடனும் சேரு வதுடன் கூடவே, சோவியத யூனியனு டனும சோஷலிஸ்ட் சீனத்துடனும் நட் புறவுகளை அதிகமாக வளர்த்துக்கொள்ள வேண்டுமென்று இந்திய சர்க்காரை நம் முடைய கட்சி கோருகிறது.

## டாடாவின்.....

1-ம் பக்கத் தொடர்ச்சி

மதிப்புள்ள யந்திரங்களையும் தொழில் நுணுக்க ஆலோ சனைகளையும ஏற்றுமதி செய்ய ஆர்டர் பெற்றுள் ளார்.

### பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை

இதில் டாடாவுக்குஉள்ள பெருமை என்னவெனில, டாடாவுக்கு கிடைத்த 4 ஏற்றுமதி ஒப்பந்தங்களில் ஒன்று, பிரிட்டனேடு ஒப் பந்தம ஆனது,

ஆனல், இறுதியில் டாடாவுக்கே அவ்வேற்று மதி ஒப்பந்தம் ஆனது. பிரிட்டிஷ் ஏகாதிபத்தியம தளர்கிறது, இந்திய பெரு முதலாளித்துவம்முன்னேறு கிறது.

மேலே கண்ட ஒப்பந்தங் களின்படி தொழில்நுணுக்க ஆலோசனைகளையும்,யந்தி ரங்கள ஏற்றுமதி செய்ய வும டாடாவுக்கு சொந்த மான டாடா எக்போர்ட் டிஸ்கோ போன்ற பல பெரும் கம்பெனிகளுடன். டாடா எஞ்சினியரிங் ஆலோசர்களும் ஈடுபட டுள்ளனர்.

---

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) தமிழ்மாநிலக் குழு சார் பில் தீக்கதிர் அச்சகத் தில் (6-16 பைபாஸ் ரோடு மதுரை.625018) அச்சிட்டு வெளியிடு பவர் ஆசிரியர் கே. முத்தையா.

### ஜனநாயக மாதர்...

(3-ம் பக்க தொடர்ச்சி)

பள்ளிக்கூடங்களுக்குச் செல்ல முடியாத நிலையும் ஏற்படுகிறது.

எனவேஇந்நகரில்இருந்து கடலூரில் உள்ள கல்லூரி கள், கலாசாலைகள் இதர பள்ளிகளுக்குச் செல்லும் மாணவர், மாணவியர் களுக்கு டவுன் பஸ்களில் அரைக்கட்டணச் சலுகை அளிக்க ஏற்பாடு செய்யு மாறு இம்மாவட்ட ஆட்சி யாளரையும், மண்டலப் போக்குவரத்து அதிகாரி யையும் இம்மாநாடு கேட டுக் கொள்கிறது.

**நடக்க இருப்பவை**

### ஜனநாயக மாதர் சங்க பேரவைக் கூட்டம்

இடம்:மதுரைமாகாளிபட்டி கல்யாண மஹால்

நாள் : மார்ச்19 மாலை 4மணி

பேசுநர்:

பாப்பாஉமாநாத்

சீதாலட்சுமிபரமசிவன்

சுப்புலட்சுமி

## ஜனநாயக மாதர் சங்க தென் ஆர்காடு மாவட்ட மாநாட்டில் தேர்ந்தெடுக்கப்பட்ட நிர்வாகக் குழு பின்வருமாறு

தலைவர் தோழியர் யசோதா மோகன் (நெய் வேலி) உபதலைவர்கள் குப் பம்மாள் (தூக்கணம்பாக் கம்) சேதுநடராஜன் (கட லூர்) செயலாளர் ஷாஜாதி கோவிந்தராஜன் (நெல்லிக் குப்பம்) துணைச்செயலாளர் கள் பத்மா விசுவநாதன் (சிதம்பரம்) கஸ்தூரி (வட லூர்) பொருளார் பியாரி பேகம்.

### கமிட்டி உறுப்பினர்கள்

அம்பிகா விஜயரங்கம் கிருஷ்ணவேணி (புதுவை) மேரிஜாகப், சரசுவதி வீர பத்திரன், சாந்தகுமாரி(நெய் வேலி) ஜெயலட்சுமி சுகு மார். பிரேமா (வடலூர்) சம பாவதி பொன்னம்பலம். அபூர்வம் முருகேசன் (நடு வீரப்பட்டு) சரசுவதி பத்ம நாபன் (விழுப்புரம்) அரும்பு மாணிக்கம (தவளாண்டலம்) தமிழரசி, அமராவதி நடரா ஜன், (நெல்லிக்குப்பம்) குமு தம் (புதுப்பேட்டை)பார்வதி துரைசாமி (விருத்தாசலம்) (கிள்ளை) (குமராட்சி)

## சி. ஐ. டி. யூ. வுடன் இணைந்த இன்ஜினியரிங் சங்கங்களுக்கு ஓர் அறிவிப்பு

அன்பார்ந்த தோழரே!

சி ஐ டி யூ வுடன் இணைந்த எஞ்சினியரிங் தொழிற்சங்கப் பிரதிநிதிகள் கூட்டம 22—3—74 அன்று 10-122யில் மில ரோட். கோயம்புத்தூர் 9-ல் கூடுகிறது. எனவே எஞ்சினியரிங் சங்கங்கள், கூட்டத்திற்கு 2 பிரதிநிதிகளுக்கு குறையாமல். மேலே குறிக்கப்பட்ட முகவரிக்கு காலை 7 மணிக் குள் சேரும்படி அனுப்பி வைக்கக் கேட்டுக் கொள் கிறேன.

தோழமையுள்ள.
ஏ. நல்லசிவன்,
சி ஐ டி யூ செயலாளர்

மதுரை
15—3—74